உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-ங0] ஆங்கிரஸ ஹூ வைகாசிமீ [பகுதி-எ.
Vol. XXX. May-June-1932. No. 7.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

1932.

Printed by Srimathu RAJA M. DINAKARA BAHADUR AVL., and published by THIRU. NARAYANA IYENGAR, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

உ

# ஒரு வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும், மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி-௩௰] ஆங்கீரஸஸூ வைகாசிமீ [பகுதி-௭.

Vol. XXX. *May-June-1932.* No. 7.


## பரிமேலழகரும் மணக்குடவரும்.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்"

என்று வயாரப் புகழுமாறு ஒப்பேதுமின்றித் திப்பியம்பெற்றே யுறுதி யளித்து மறுவையழித்தே வீறுகொண்டு விளங்குந் திருக்குறட்கு உரையியற்றினோர் பதின்மராவர். அவராவார் *தருமர் மணக்குடவர் தாமத்தர் முதலியோரென்ப அவருட் பரிமேலழகர் இயற்றிய வுரையே விஞ்சியதாமெனல் புலத்தாற்சான்ற புரையோர்கொள்கையாகும்.

"வள்ளுவர்சி ரன்பர்மொழி வாசகந்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—யொள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகுசித்தி யோராறுந்
தண்டமிழின் மேலாந் தரம்."

எனவரும் பெரியார்திருவாக்கு மதனை வலியுறுத்தும்.

---

* "தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர், பரிமே லழகர் பருதி—திருமலையர், மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற், கெல்லையுரையெழுதி னோர்."

இக்காலத்தும் பரிமேலழகருரையே யெங்கும் பயிலப்பட் டெழில் பெறுகின்றதென்பது கண்கூடு. மற்றையோர் உரைகளுள் மணக்குடவருரையொன்றுமே சிலவாண்டுகட்குமுன்றொடங்கி வெளிவந்துலவுகின்றது. மற்றையோருரைகளி லுயிர்த்துள சிலவும் வெளிவரின் ஆய்வோர்க் கரும்பயமுதவுமென்ப தொருதலை. மணக்குடவருரையும் அளவாற் சிறியதாயினும் பொருளால் விழுமியதாமெனல் வெற்றுரையாகாதெனச் சிறிதுநோக்கியதுணையானே தோற்றுகின்றது. அதனைப் பரிமேலழகருரையினுஞ் சிறந்ததாமெனச் சிலர் கூற்றானுங் குறிப்பானும் அறிவிக்கமுற்படுகின்றனர். ஆகையால், அவ்வுரையினும் இவ்வுரை சிறந்ததோ? இவ்வுரையினும் அவ்வுரை சிறந்ததோ? இரண்டும் ஒப்புமைகொண்டனவோ? என்னும் ஐயத்தாலுந்தப்பட்டு அதனையும் இதனையும் உடன்வைத் தாராயத் தொடங்கினன். தொடங்கி ஆராயுங்கால் ஆங்காங்கே தோன்றுங் குறிப்பினைச் செந்தமிழ்மூலம் வெளிப்படுத்தலாமென்னும் எண்ணமுண்டாயது. ஆகையால் அவ்வெண்ணத்தின்வழியொழுகி யீண்டு வரையமுற்பட்டனன்.

பரிமேலழகர்.

இவர் அறத்துப்பாலைப் பாயிரம், இல்லறவியல், துறவறவியல், ஊழ் என நான்குபகுதியதாகவும், பொருட்பாலை அரசியல் அங்கவியல் ஒழிபியல் என மூன்றுபகுதியதாகவும், காமத்துப்பாலைக் களவியல் கற்பியல் என இருபகுதியதாகவும் கொண்டுள்ளார். அங்கவியலைமட்டும் அமைச்சு நாடு அரண் பொருள்செயல்வகை படை நட்பு என ஆறு உட்பிரிவினதாகக்கொண்டுள்ளார்.

மணக்குடவர்.

இவர் அறத்துப்பாலையும் காமத்துப்பாலையும் பரிமேலழகர் கொண்டவாறே கொண்டு, பொருட்பாலை அரசியல் அமைச்சியல் பொருளியல் நட்பியல் துன்பவியல் குடியியல் என ஆறுபிரிவினதாக்கினர்.

பொருளியல் என நாடு அரண் பொருள்செயல்வகை படைமாட்சி படைச்செருக்கு என்னு மைந்ததிகாரங்களின் றொகுதிக்குப் பெயர் சூட்டியுள்ளார். பேதைமைமுதல் மருந்தீறாகவுள்ள அத்தொகுதிக்குத் துன்பவியலெனப் பெயர்சூட்டியுள்ளார். குடிமுதற் கயமையீறாகவுள்ள அத்தொகுதிக்குக் குடியியலெனப் பெயர்சூட்டியுள்ளார்.

"பாயிர நான்கில் லறமிரு பான்மூன்றே
தூய துறவறமொன் றாழாக—ஆய
அறத்துப்பா னல்வகையா வாய்ந் துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து." (வள்ளுவமாலை.)

"அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை" (வள்ளுவமாலை.)

எனவரும் எறிச்சலூர் மலாடனாரும் போக்கியாரும் கூறிய வாக்கிற்குப் பெரிதும், "படைகுடி கூழமைச்சு நட்பா ணாறு, முடையா னரசரு ளேறு" என வரும் வள்ளுவனார்வாக்கிற்கு முழுவதும் ஒத்துச் செல்கின்றன பரிமேலழகர்கொண்ட இயலின் பெயரும் முறையுமென்ப தொருவந்தம்.

"படைகுடி கூழமைச்சு நட்பா ணாறும்" என ஆசிரியர் இனைத்தெனத் தொகுத்துக்கூறியவற்றுளன்றி வேறுப, குடிமுதலியவற்றைக் கூறுதலால் அப்பகுதிக்கு 'ஒழிபியல்' என வரும்பெயரே தக்கதாமெனப் பரிமேலழகராற் கொள்ளப்பட்டதெனத் தெரிகின்றது. "இனி அவ்வாசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்றதியல்பு பதின்மூன்றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி முதற்கட் குடிமைகூறுகின்றார்" என அவர் அங்கெழுதியதையும் நோக்குக.

இனி, அமைச்சர் தாளர் படையாளர் நட்பாளர்கட்குக் குடிப்பிறப்பு பண்புடைமை நாணுடைமை முதலியன இலக்கணமாமென்பது, "குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு, நாணுடையான் கட்டே தெளிவு", "பற்றிலர் நாணார் பழி", "பெருமைக்கு மேனைச் சிறுமைக்கும்", "வன்கண் குடிகாத்தல்", "அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம் பண்புடைமை", "குணநாடிக் குற்றமு நாடி", "மறமான மாண்ட வழிச்செலவு", "நகிறொறு நூனயம் போலும், பயிறொறும் பண்புடையாளர் தொடர்பு", "குணனுங் குடிமையும்", "குடிப்பிறந்து தன்கட் பழிநாணுவானை", "நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற், குப்பாதல் சான்றோர் கடன்", "பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை", "செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்

கேண்மை," "நாணென்னு நல்லாள்," 'ஈன்ருள் முகத்தேயு மின்னுதா லென்மற்றுச், சான்ருேர் முகத்துக் களி" என உடம்பாட்டுமுகத்தானும் எதிர்மறைமுகத்தானும் எல்லாவிலக்கணமும் பெறப்படப் பொதுவாகவும் கூறுங் குறள்களா னுணரப்படுதலான் அவ்வியல்களி னெழிபாகவும், "அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா, மான முடைய தரசு", "அஞ்சாமை யீகை", "கொடையளி செங்கோல்", "பேருங்கோடையான் பேணுன் வெகுளி", "சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு, மில்லாயின் வெல்லும் படை", "மனநல நன்குடைய ராயினும் சான்ருேர்க், கினநல மேமாப் புடைத்து" எனவருங் குறள்கள் முதலியவற்ருனுணரப்படும் அரசரிலக்கணமாய ஈகை மானம் சான்ருண்மை முதலியவற்றை யுடம்பாட்டுமுகத்தானும் எதிர்மறைமுகத்தானும் நன்றியில் செல்வமுதலிய அதிகாரங்களுணர்த்தலான் அவ் வரசியல்முதலிய இயல்களி னெழிபாகவும், "தள்ளாவிளையுளும்" என்னும் நாட்டினிலக்கணமாய உழவரையும் உழவின்றன்மை முதலியவற்றையும் 'உழவு' என்னு மதிகாரமுணர்த்தலான் அவ்வதிகாரத்தி னெழிபாகவும் இறுதியியல் விளங்கலின் அதற் காசிரியர் ஒழிபியலெனப் பெயரிட்டிருப்பரென்பது தேற்றமாகின்றது.

அரசர் அமைச்சர் முதலியோர்க்குக்கூறிய அன்பு அறிவு முதலிய இலக்கணங்களைத் தனித்தனி அறத்துப்பாலிலும் இப்பாலிலும் ஆங்காங்கே விளக்கியிருத்தல் காண்க.

ஆனு லதற்குக் 'குடியியல்' என்னும் வேறுமொரு பெயருளதாகச் சங்கத்தார்வாக்கா லறிகின்றனம். அப்பெயரே மணக்குடவராற் கொள்ளப்பட்டுளது. அதனுட் குடியிலக்கணமட்டுமன்றி வேறுபிறவுங் கூறப்படுகையால் அப்பெயர் அதற்கிடல் எங்ஙனம் பொருந்தும்?

சங்கச்சான்ருேர்வாக்கிற்கு மாருகவும் "படைகுடி கூழமைச்சு நட்பா ரூறும்" என்னுங் கருத்துக்கு மாருகவும் 'துன்பவியல்' என ஓரியலை மணக்குடவர்கொண்டாரெனத் தெரிகின்றது.

இனிப் பொருளாக்குதற்கிடமாய நாட்டியல்புகூறுதலானும், அந்நாட்டிற் கேமமாகிய அரணியல்புகூறுதலானும் அவ்விடத்திலாக்கும் பொருள்கூறலானும் அப்பொருளினுலாக்கும் படையினது நன்மை

கூறுதலானும் அப்படையினன்மையாலாக்கும் படைச்செருக்குக்கூறுதலானும் முறையே நாடு அரண் பொருள்செயல்வகை படைமாட்சி படைச்செருக்கு என்னும் இவ்வைந்தின் றொகுதி 'பொருளியல்' எனற் கேற்புடையதாமென மணக்குடவர் கருதி அப்பெயரை அத்தொகுதிக்கிட்டுள்ளார். நட்பும், பொருட்குக் காரணமாகலின் அதனையுஞ் சேர்த்து ஒருதொகுதியாக்கி அப்பெயரிட்டிருப்பின் அவர்கருத்து வலியுறுமன்றே ?

இனி இவர் பொருளியலாவது இன்னது என விளக்கங்கூறுமையானும், 'துன்பவியல்' என்பதற்கும் அங்ஙனமே கூறுமையானும், 'நாடு' என்பதற்கு விளக்கங்கூறுங்கால் 'பொருளியல்' என்பது இன்னது என விளக்கங்கூறினும் 'பொருளியல்' என்னும்பெயர் வள்ளுவராலிடப்பட்டதுதான் எனத் துணியும்வாய்பாட்டானன்றிப் பொதுவாகக் 'கூறப்படும்' எனக் கூறிச்சேறலானும், இல்லறவியல்முதலியவற்றிற்கு விளக்கங் கூறுமிடத்து ஆசிரியரே அப்பெயரிட்டு முறைபுறநிறுத்தினர் என்பது வெளிப்படக் 'கூறினர்', 'கூறினரென்று கொள்ளப்படும்' என எழுதிச் சேறலானும், அவ்விடங்கடாம் விவாதமற்றவாகலானும், சங்கத்தார்வாக்கினும் அப்பெயர்கள் காணுமையானும் அவை அவராற் படைக்கப்பட்டன என்றேனும் முன்னொருவாற் படைக்கப்பட்டனவற்றைத் தாம் உடம்பட்டனரென்றேனும் துணிதற் கிடனுண்டு.

பரிமேலழகர் இயல்கட்கு விளக்கங்கூறுங்கால் ஆசிரியரே யப்பெயர்களையிட்டனரெனப் புலப்படுமாறு கூறிச்செல்கின்றனரென்பது வெளிப்படை.

இனி அங்கவியலெனப் "படைகுடி கூழமைச்சு நட்பரணாறும்" என்பதை நோக்கி அவ்வாறற்கும் பெயர்கொண்டனராயினும் "அரசியலை யைந்து" என்னும் போக்கியார்வாக்கிற்கு மாறுபடுமென்ப தொருதலை.

போக்கியார் அமைச்சியல் அரணியல் பொருளியல் படையியல் நட்பியல் குடியியல் என்னும் ஆறுபிரிவினதாகக் கொண்டுள்ளார் பொருட்பாலை.

பரிமேலழகர் அகச்சான்றாகிய 'படைகுடி' என்பதைக் கைக்கொண்டு புறச்சான்றாகிய போக்கியார்வாக்கைக் கைவிட்டனர்போலும்.

எனவே, இருவரும் போக்கியார்வாக்கைக் கைவிட்டனரெனல் சாலாது. பரிமேலழகர் பெரிதுங் தழுவினர்; வள்ளுவனார் வாக்கிற் கருத்தூன்றியதால். மணக்குடவர் சிறிது தழுவி வள்ளுவனார்வாக்கிற் கருத்தூன்றாதும் சென்றனர் என்க.

அற்றேல், "படைகுடி" என்பதை யாதாரமாகக்கொண்டே அமைச்சியல் நாட்டியல் அரணியல் பொருளியல் படையியல் நட்பியல் எனக் கொள்ளலாமன்றோவெனின், அறத்துப்பாலில் துறவறவியலுக்குப் பின் 'ஊழ்' என்பதைபுணர்த்தி யிகழுமதிகாரத்தையும் ஊழியலென இருவருமெழுதாமையானும், ஒவ்வோரதிகாரமாகக் காணப்படும் நாடு அரண் பொருள்செயல்வகை என்னுமிவற்றைத் தனித்தனியே ஒவ்வோரியலாகக் கூறுதல் பொருந்தாதாகலானும், இயலென்பது பலவதிகாரங்களை யுட்கொண்டதாமென அறியப்படுதலானும், மணக்குடவரும் அக்கருத்தினரென்பது புலப்படுதலானும் பிறநூல்களினு மேகதேசங் காணப்படினும் அதுவும் அந்நூலாசிரியரா லமைத்ததாமென ஒருதலையாகக் கூறவியலாதாகையானும் பரிமேலழகர் 'அங்கவியல்' எனப் பெயர்கொண்டதே பொருந்துமென்க.

(தொடரும்.)

இங்ஙனம்,

பண்டித. சித. நாராயணசாமி.

---

உ

# சேனாவரையருரைப்பதிப்பும் பிழைதிருத்தமும்.

:(o):

ஏட்டுப்பிரதிகளிலுள்ள பழையநூல்களை அச்சிற்பதிக்குங்கால், அவற்றினுருவங்களை உண்மையாக அறிந்து திருத்தமுறப்பதித்தல் மிக அரிதாகும். ஏனெனின், பிரதி எழுதுவோராலும், சிதல்முதலியவற்றாலும் அவற்றினுருவங்கள் வேறுபட்டுஞ் சிதைந்துமிருத்தலின். ஒருபிரதியைப்பார்த்து மற்றொருபிரதியெழுதுவோர் அவதானமின்றியெழுதுவதாலும் உண்மையுணராது திருத்திவிடுவதாலும் பல பிழைகள் நேருகின்றன. பொருளுணராதோர் எழுதுவதாலும் பல பிழையாகின்றன. ஒருவர்சொல்லக் கேட்டெழுதுவோர் ஒன்றை ஒன்றாகக் கேட்டெழுதுவதாலும் பிழைகள் நேருகின்றன. இங்ஙனம் நேருகின்ற பிழைகளை உண்மையறிந்து திருத்தல் மிகவுங் கஷ்டமாகும். அப்பிழைகளை யோகிருந்து சிந்தித்தாலும் காண்டல் அரிதாகும். திருக்குறட் பரிமேலழகருரை, திருத்தமுற முன்பதிக்கப்பட்டதாயினும், பின்னும் பல திருத்தப்பட்டுச் செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளிவந்துள்ளன. அங்ஙனமே சேனாவரையருரைப்பதிப்பினும் சில திருத்தப்பட்டு மேற்குறித்த பத்திரிகையில் வெளிவந்துள்ளன. இப்போதும் அதன்கண் ஸ்ரீமாந் பண்டித. சித. நாராயணசாமியார் அவர்களாலே சில திருத்தப்பட்டு மேற்குறித்த பத்திரிகையில் வெளிவந்தன[1]. அப்பிழைகளுள் ஒன்று இடைச்செருகல். ஒன்று சொல்விடுக்கப்பட்டது. ஒன்று எழுத்துத்திரிபு. ஒன்று எழுத்துவிடுக்கப்பட்டது.

அவற்றுள், இடைச்செருகல் என்ற வழுவைமாத்திரம் யாம் ஒப்புக்கொள்ளவில்லை; ஏனெனின், ஒருதொடர்முழுவதையும் இடைச்செருகல் என்று கூறுவதை ஒப்புக்கொள்ளினும், ஒருபெருந்தொடரினுள், ஒரு சிறுதொடரை ஒருவர் இடைச்செருகினார் என்றதை எப்படி ஒப்புக்கொள்ளலாம், என்னுங் கருத்தினால். அன்றியும், சேனாவரையருரையில் வாக்கியப்பிழைகளன்றி, இடைச்செருகல்கள் இருப்பதாகவும்

[1]செந்தமிழ், தொகுதி 28. பக். ௪௪௩-௪௪௮.

எமக்குப் புலப்படவில்லை; அதனுனுமாம். அதனாலே இடைச்செருகல் என்ற அத்தொடரை இடைச்செருகலன்றென யாம் காரணங்காட்டி மறுத்து ஓர்கட்டுரை எழுதி, ஷை பத்திரிகையில் வெளிப்படுத்தினேம்.* அதனைப் படித்துப்பார்த்து ஸ்ரீமத். பண்டித. நாராயணசாமியாரவர்கள், அவ்வாக்கியத்தில் வரும் 'பகுப்ப' என்பதற்குத் தன்வினையாகப் பொருள்கோடல் பொருந்தாதென அதனை மறுத்துரைத்தார்கள்.† வேறு பிரமாணமின்றாயினும், வெளுப்ப, பாப்ப, பிளப்ப, வளைப்ப, முதலிய சொல்வழக்கை நோக்கின் அதுவும் தன்வினையில் வருமென்றே அங்ஙன முரைத்தேம் ஆயினும், பின் அவ்வாக்கியத்தின் உண்மைரூபம் தற்செயலாக எமக்குப் புலப்பட்டமையானே அதன்கண் யாம் முன்னர்க் கொண்ட கருத்தைவிட்டு, அவ்வுண்மை ரூபத்தை இப்பொழுது இப்பத்திரிகைவாயிலாக வெளிப்படுத்துகின்றேம். [உண்மையுணரவேண்டுமென்பது எமது கருத்தன்றி மறுத்துரையாடவேண்டுமென்பது. எமது கருத்தன்று]. அவ்வுண்மை ரூபம் வருமாறு:—

"உணற்கு என்னும் வினையெச்சம் உருபேற்றதொழிற்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும் உருபும் பெயரு மோன்றாகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறாயினாற் போல" என்பதில் உருபும் பெயருமேன்றாகாது பகுப்ப என்பதே முன்னருள்ள உண்மைரூபமாகும்.

சொல்வோன் "மென்றாகாது" எனக் கூறக் கேட்டோன் மொன்றாகாது எனக் கேட்டு எழுதினமையால் அது திரிவுபட்டது என்பது எமதுகருத்து. அன்றிப் பார்த்தெழுதுவோனும் அவதானமின்றி, அல்லது கருத்துநோக்காது 'மோன்றாகாது' என்றும் எழுதியிருக்கலாம். எவ்வாறாயினும் அது பிழைபாக எழுதப்பட்டு வழங்கிவரலாயிற்று.

இனி அவ்வாக்கியம் பொருத்தமாமாறு காட்டுதும்:— "உணற்கு என்னும் வினையெச்சம் உருபேற்ற தொழிற்பெயரோடொப்புமையுடைத்தாயினும் உருபும் பெயருமென்றாகாதுபகுப்பப், பிளவுபட்டிசையாது ஒன்றபட்டிசைத்தலான் அதனின் வேறாயவாறு

---

*செந்தமிழ். தொகுதி—23. பக்கம்—௪அக-௪௯௦.

†செந்தமிழ்த்தொகுதி ௩௦. பக். எ௦-எ௩.

போல" என்பதில் உருபும் பெயருமென்றாகாது என்பது பகுப்ப என்பதோடு முடிக்கப்படும். படுங்கால் உணற்கு என்னும் வினை யெச்சம் உருபேற்ற தொழிற்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும், தொழிற்பெயர்போல உருபும் பெயருமென்று இரண்டுசொல் ஆகாமல் (தன்னை அவ்விருசொல்லில்) பகுத்துணரும்படி (ஒரு சொல்லாக உணரும்படி) பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறாயினாற்போல என்பது கருத்து. இங்ஙனமுரைக்குங்கால் உருபும் பெயருமென்றாகாதுபகுப்ப என்பதும், வினையெச்சதருமமாதல் காண்க. பகுத்துணர்தல்—வேறுபடுத்தறிதல், இக்கருத்தைச் சேனா வரையர் முன்னும் வேற்றுமையியலில்,

"கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப"

என்னும் (சுகூ-ஞ்) சூத்திரஉரையில் "வினைச்சொல் இறுதிநிற்கும் இடைச்சொல் தாமென வேறுணரப்படாது அச்சொற் குறுப்பாய்நிற்கு மன்றே! இவை அவ்வாறு பெயர்க்குறுப்பாகாது தாமென வேறுணரப் பட்டு இறுதிநிற்குமென்பார் நிலைதிரியாதென்றார்". என்று விரித் துரைத்தவாற்றால், உணர்ந்துகொள்க. எனவே ஒன்றுபடுதலாற்றான் உருபும் பெயருமென்று இருசொல்லாக உணராமல் அவற்றிற் பகுத்து ஒருசொல்லாக உணரப்படுகின்றது என்பது கருத்து.

இங்ஙனங் கொள்ளுங்கால் இடைச்செருகலென்பது வேண்டிய தின்றாம். இன்னும் இதுபோன்ற வாக்கியங்களிற் பிழைகாணப்படின் அவை உண்மைநோக்கித் திருத்தப்படுவனவேயன்றி, இடைச்செருக லென்பது பொருந்தாதென்பது எமதுகருத்து.

இன்னும், இதுபோன்ற ஓர்திருத்தத்திற்கு, ஸ்ரீமத் P. S சுப்பிர மணியசாஸ்திரியார் அவர்கள் (M.A., Ph. D.L.T.) காரணராகின்றார்கள், அது வருமாறு:—

"உருபென மொழியினு மஃறிணைப் பிரிப்பினு
மிருவீற் றுமுரித்தே சுட்டுங் காலை"

என்னும் (கிளவி. உச-ம்) சூத்திரத்துக்குச் சேனாவரையருரைத்த உரை யின்கண்வரும் "உருபினுமென்னாது உருபெனமொழியினும் என்றமை

யால், அவ்வுருபின்பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டமென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க" என்னும் விரிவுரையுள், 'உருபினும்' என்பதன்கண், சாஸ்திரியாரவர்கள் ஒரு ஆக்ஷேபம் நிகழ்த்தியுள்ளார்கள். அஃது, "உருபினும் என்றால் உருபென்னுஞ் சொல்லெனப் பொருள்படுமா? எனின், சொல் என்பதைக் குறிக்கவேண்டித்தான் சூத்திரத்தில் உருபு எனமொழியினுமெனத்தொல்காப்பியர் கூறியுள்ளார் என்பது தோன்றுகின்றது. தன்னினமுடித்தலான் வடிவுமுதலிய சொற்களுங் கொள்ளலாமென்று சேனாவரையர் கூறியிருப்பிற் பொருந்தும்" என்று சேனாவரையரைக் கண்டித்துள்ளார்கள்.

உருபினும் என்பதற்கு உருபின்கண்ணும் என்பது பொருள். உருபெனமொழியினும் என்பதற்கு உருபு என்று சொன்னாலும் என்பது பொருள். இரண்டும் ஒருபொருள்படவே வந்தன. அது பற்றியே சாஸ்திரியாரவர்கள் சொல் என்பதைக் குறித்தே உருபெனமொழியினும் எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார் என மயங்கிக்கூறியதும் என்க. இதன்காரணம் யாதென மிகவும் உற்றுநோக்கினேம். அதன்காரணமுந் தற்செயலாக எமக்குப் புலப்பட்டது. அதனையும் ஈண்டு விளக்குதும். 'உருபினும்' என்று கொள்ளின், 'காப்பினுைப்பின்' என்புழிப்போலப் பொருளையே குறித்துவருதலானும், அச்சூத்திரத்துவரும் மொழியினும் என்பதோடு இயையாமையானும் அது பாடமன்று; 'உருபெனும்' என்பதே பாடமாகும். அது ஓசையொற்றுமையானே உருபினுமென்று கேட்கப்பட்டோ அல்லது அவதானமின்மைபற்றியோ 'உருபினு'மெனப் பிரதியில் எழுதப்பட்டது.

உருபெனுமொழியினுமென்பது "எல்லாருமென்னும் பெயர்நிலைக்கிளவியு" மென்பதுபோல உருபு என்கிற சொல்லின்கண்ணும், எனப் பொருள்பட்டுச் சொல்லையே உணர்த்திவருதலும் 'உருபு என்று சொல்லுதற்கண்ணும் என்புழி உருபு என்பது தனித்துப் பொருளையே உணர்த்திவருதலும் ஈண்டு உணரப்படுதலின் இரண்டும் வேறுவேறுகருத்துடையவாதல் தெற்றெனப் புலப்படும். ஆதலாற் சேனாவரையருரையே பொருத்தமாதலும் சாஸ்திரியாரவர்கள் கூறியதே பொருத்தமில்லாமையும் அறியப்படும், சாஸ்திரியாரவர்கள் அங்ஙனம் கூறு

வந்தகாரணம் பாடவேற்றுமையே. ஆதலின் நன்கு ஆராயாது சேனா வரையருரையிற் குற்றஞ்சுமத்தல் தகுதியன்றேயாம்.

இன்னும் சேனாவரையருரையின்கண், அவ்வுரையை இரண்டாவதாகப் பதித்த ஸ்ரீமத். சுந்தரசுவாமிபிள்ளையவர்களும் பலதிருத்தங்கள் செய்துள்ளார்கள். அவற்றுட்சில உரையின் அழகைக் கெடுப்பனவாகக் காணப்படுதலின் அவற்றையும் ஈண்டுக் காட்டுதும்:—

“பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென வறியு மந்தந்தமக் கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.”

என்னும் 4ம் சூத்திரவுரையின்கண் “தமக்கெனவீறுடைய ஆடூஉ வறிசொன் முதலாயினவற்றிற்குரியவீற்றானும் இசைக்குங்சொல்” என்பதில் ‘தமக்கென வீறுடைய’ என்பதைத் ‘தமக்கெனவீறுடைய வாய்’ எனத் திருத்தி அவ்வாக்கியத்தின் அழகையும் செறிவையும் கெடுத்துவிட்டார்கள். அவர்கள் திருத்தியதற்குக் காரணம், ஈறுடைய என்பது வினையாலணையும்பெயராகப் பொருள்படுமென்று கருதாமையே. உடைய—உடையன. ஈறுடைய என்பதற்கு ஒரு தொடரிசைக்குறியிடின், அது ஈறுடையன எனப் பொருள்பட்டு எழுவாயாய், இசைக்குங்கொல் என்பதோடுமுடிந்து பொருள்படும். ‘ஈறுடையவாய்’ என்னுந் திருத்தம் அவ்வாக்கியச்செறிவைக் கெடுத்தல் காண்க. இன்னும் க-ம் சூத்திரத்து உரையில்வரும் சமயவாற்றலைச் சமவாயவாற்றல் என்று திருத்தினார்கள். அது சாஸ்திரியாரவர்களாற் சொல்லதிகாரக்குறிப்பில் மறுக்கப்பட்டது.

இன்னும், “இரட்டைக்கிளவி இரட்டிற் பிரிந்திசையா” என்னுஞ் சூத்திரவுரையுள்ளும், குறுகுறுத்தது என்னுஞ்சொல் குறுத்தது குறுத்தது எனச்சொன் முழுதும் வரின் அடுக்காம். அங்ஙனம் சொன் முழுதும்வாராது முதற்சொல் குறைந்திருத்தலின் அடுக்கன்மையறிக என்னுங் கருத்தில், சேனாவரையர் “குறுந்தது குறுத்தது, கறுத்தது கறுத்தது எனச் சொன்முழுதும் வாராமையின் அடுக்கன்மையறிக” எனக்கூறச் சொன்முழுது மென்பதை நோக்காது, அதனைச் ‘சொன்

முழுதும் இருமுறை வாராமையின்' என்று திருத்திவிட்டார்கள். இரு முறையாயின், குறுகுறுத்தது குறுகுறுத்தது என்றன்றோ இருத்தல் வேண்டும். இத்திருத்தமும் சேனாவரையரைப் பிழைப்படுத்துகின்றது.

இன்னும், ஆசிரியர் "அதனினியறல்" என்னுஞ் சூத்திரத்து ஓடுவெனத், தாம் ஓடு எனத் திருத்தியுள்ளார். ஓடு என்பது ஆசிரியர் காலத்து அதிகம் வழக்கின்று. இவற்றையெல்லாம் அறிஞர் உற்று நோக்கி, உண்மைகாணாது சேனாவரையருரையைத் திருத்துவது நன்றன்று என்பதை உணர்ந்துகொள்க.

இவ்வுரையை யாம் எழுதியது, உண்மையுணருமுன் ஒருநூலைத் திருத்துவது நன்றன்று என்பதை உணர்த்துதற்கன்றி, அறிஞர்களைக் கண்டிக்கவேண்டுமென்ற கருத்தாலன்று. ஆதலால் இவ்வுரையை அறிஞர்கள் உவப்பார்களென எண்ணுகின்றேம்.

இங்ஙனம்,

சி. கணேசையர்.

---

# இறப்பு.

நவநீதகிருஷ்ண பாரதி எழுதியது.

இறப்பென்பது உடலோடுறவுபூண்ட உயிரானது அவ்வுடலைவிட்டுப் பிரிதல்.

இவ்விறப்பைக்குறித்து அஞ்சிக் கவலாத மக்கள் இல்லையென்பது பெருவழக்கு. இவ்வழக்காறுண்டேனும், அவ்விறப்பானது குறுகுதல் புலப்பட்டவிடத்தே அஞ்சிக் கவலுதலும், புலப்படாவிடத்தே வாளா செருக்குறுதலும் மக்கட்பன்மைக்கமைந்ததோரியல்பென்ப.

சிற்றின்பம்வேண்டித் திருவிழந்து பிணிமுழங்குங் காலத்தன்றோ இளஞ்செல்வர் தமது குற்றங்கருதித் துயருழக்கின்றனர்? அங்ஙனம் உழக்கின்றவரும் சிறிது திருவுறினும், பிணியறினும் பண்டு தாங் கொண்ட செருக்கைப் பன்மடங்கு பெருக்கி மேற்கொள்வர்.

மாணவருட் பலரும், ஆண்டெல்லாம் தத்தமக்கேற்ற கல்வித்துறையிலே சிறிதுஞ் செல்லாராய், வேண்டியாங் காடிக் களித்துவிட்டுப் பரீக்ஷைக்குஞ் சென்றமர்ந்து, ஆங்கு வினவிய விடைகளுக் கேற்ற விடையறிகிலாய்ச் சிறிது கவற்சியெய்தியும் அதனைப் புலப்படுத்தாதும், தாமும் மறந்தும் பண்டைத் தங்கோலமே மேற்கொண்டு, வருங்காலத்தே பரீக்ஷை முடிபுரையைக் கேள்வியுற்றபின்னரே, கல்வித்துறையிற் பெரிதும் முயன்றுவந்தார்போன்று நடித்துக் கண்ணீர்பெருக்குதல் வழக்காறன்றோ?

ஏழைவயிற்றுள்ளே எரிபுக்கழற்றும்வண்ணம் வன்னெஞ்சுகொண்டு பற்பல இழிதகவுசெய்துவருந் தீயோரும், அறமும் அன்புந் துறந்து கழுதைபோற் காமங்கன்றிச் சிறந்த கல்லாக் களிமகாரும், அன்ன பிறரும் தத்தமக்கு அழிவுவரும்போழ்தத்தே ஆற்றொணு இன்னன்மேற்கொண்டு பெரிதும் இரங்குதலுங் கண்கூடு.

இன்னோரெல்லாம் இறைவனையும் ஒரு தாசனாக்கி 'நீ இவ்வின்னலைத் தீர்த்துவைப்பின் யாம் இன்னது தருதும்' என்று எமது சமய தத்துவத்தையும் உணராது மடப்பட்டுவரும் நிலைமையும் மேறகூறியவற்றை நிலைநிறுத்தும்.

இக்கூறியவற்றானே அழிவு வருங்காலத்தே துன்புறுதலும், ஏனைக்காலத்தே செருக்கெய்தலும் தமக்கியல்பாகக் கொண்டுள்ளார் மக்கள் என்பது தெள்ளத் தெளிந்துகொண்டதொரு முடிபாகும்.

கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பரும்,

> "இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
> மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ"

என்று மக்கள் தமக்கமைந்த இறப்பினை மறவாதிருப்பரேல் நலனே கொள்வர் எனத் தங்கோளை நிலைநாட்டுவாராயினர்.

[ஆசிரியருள்ளே ஒருசாரார் இறப்புமுதலிய துன்பங்களைமறந்திருத்தலே நலனென்றும், பிறிதொருசாரார் அவற்றை மறவாதிருத்தலே நலனென்றுங் கூறுப. அவ்விருசாராருள்ளே பிந்திய சார்பினை நமது கம்பநாடர் சேர்ந்தவராவர்.]

சிறுவன் வயதினாலே பெரியனாகின்றான் என்று மகிழ்ந்துவருகின்றோம். இப் பெரியனாதலின்பொருள் யாது? சிறுபருவம் இறந்து பெரும்பருவம் பிறந்தது என்பதன்றோ இதன் பொருள்? சிறுபருவம்

இறந்தமைக்கு வருந்தவேண்டியதற்கு அறவே மாறாக மகிழ்ச்சியன்றோ புரிகின்றோம்?

நொடிதோறும் நமது உடம்பு இறந்துவருகின்றது. நமதுஉடம்பு ஒன்றே என்பது நமது நம்பிக்கை. நமது நம்பிக்கை ஒருபுறமிருக்க; நமது உடம்பின் வேறுபாடு அளக்குந்துணைக்குட்படாது. நாம் முன்பு கொண்டுள்ள உடம்புகள் சென்றொழிந்த இடங்களை அறிதற்குத் தெய்வத் தானுமாகாது. இங்ஙனமெல்லாம் உடம்பு அழிந்துவருதற்கு நாமெல் லாம் என்னே யிரங்கிலேம்? அவ்வுடம்பு அழிந்திலதென்னும் நம்பிக்கையானன்றோ இரங்கவேண்டியதற்குமாறாக மனமகிழ்ந்து வருகின் றோம்.

பணத்திற்காகவே தமதுவாழ்வைச் சிதைத்துவரும் ஒரு சாரார்க்கு இக்கூறியவெல்லாம் உணர்ந்துகோடற்கியலா. உடம்பிற்காக உயிரைவருத்தும் ஒருசாராருமுண்டு. இவரெல்லாம் குல்லாவிற்கு ஏற்றவாறு தலைபைச் சிதைத்துக்கொள்ளும் பேரறிஞர்குழாத்தினுள்ளே தலைமை வகிப்போராவர். வயிற்றின்கொடுமைக்கஞ்சித் தம்மொழி துறந்து அடிமையிற்பிறந்து பெரியவாய்திறந்து வாழும் பெருமக்கள் உடம்பையே மெய்ப்பொருளாகக் கொண்டுள்ளார் என்பது மலைவிளக் காகும்.

இறப்பென்பது மணச்சடங்குபோன்றதொரு மங்கலச்சடங்கு. காவுடையாராய் அரசன்படைக்கீழ் அமைந்து நிரம்ப வுண்டு மகிழ்ந்தோர் போர்வந்தகாலத்தே போர்க்கெழுந்து உயிர்விடுதற்கு முன்வருவரா? செய்ந்நன்றியும், நாட்டின்மாட்டுக் காதலுஞ் செறிந்தவொருமறவன் அப் போர்வருங்காலத்தே தனது மறங்காட்டி விழுப்புண்ணெய்திச் சுவர்க்கம் புகுதற்கு அஞ்சுவனோ?

காதலை நுணுகிநோக்குமிடத்து அக்காதற்களனுக்கும் வீரஞ் செறிந்த போர்முகத்திற்கும் வேற்றுமை சிறிதும் இன்றென்ப. காதலாட்டியின் உள்ளத்தை வென்று காதலன் குடிபுகுந் தாட்சிசெய்த லும் அங்ஙனே காதலியும் காதலன் உள்ளத்தை வென்று குடிபுக்கு ஆட்சிசெய்தலும் நிகழ்கின்றனவே. அந்நிகழ்ச்சிக்கும் பெரும்போர் நிகழ்ச்சிக்கும் வேற்றுமைதான் யாதோ? காதலன் காதலியைத் தின்னு கின்றான். காதலியும் காதலனைத் தின்னுகின்றாள். இக் காதற்போரி னும் இறப்புண்டென்பது உன்னுந்தொறுங் கழிபேருவகை தருகின்ற தன்றோ?

காதலினும் இறப்புண்டு, கற்றலினும் இறப்புண்டு. இறப்பில்லா விடம் யாண்டுமுளதாகாது. அறியாதார் இறப்பிற்கு அஞ்சுவர். இறப்பினும் இன்பம்பயப்பதொன்றில்லை.

உயிர்ப்பன்மை அறம் பொருளின்ப முற்றி வீடு பெறுதற் பொருட்டே உடலோடுறவுபூண்டுவருகின்றன என்பது எல்லாச்சமயத் தார்க்கும் முடிந்ததொரு முடிபாகும்.

அறம் முதலாகிய நாற்பொருள்களையும் சோம்பாது பருவத்தே பாற்படப் பெற்றுக்கொண்டோருக்கு உடம்பு நீங்குதலானே இன்பந் துய்ப்பதன்றித் துன்புறுதலில்லை.

கரும்பைப் பதனழிதற்குமுன் காலத்திலேயே ஆலையில் வைத்து ஆட்டி அதன் சாற்றானாகிய வெல்லக்கட்டியைப் பெற்றுக்கொண்டவர், அக்கரும்பின்சக்கை நெருப்பிலே பொருந்தி எரியும்போழ்து அதனைக் கண்டு துன்புறுதல் இவ்வுலகத்திலில்லை. அதுபோலவே, அறத்தின் வழியே பொருளீட்டி அவ்வீட்டியபொருளை அறத்தின்வழியே செலுத்தி அச்செலுத்தலான் வரும் இன்பந்துய்ப்போரும், தமது உடல் பொருளாவிகளை உலகத்திற்கே யுதவித் தவமுதலியன மேற்கொண்டு தங்கருமஞ்செய்து நிறைவேற்றியோரும் ஆகிய அவ்விருவகையோரும் தங்கள் தங்கள் உடம்பெடுத்த பயனைப் பெற்றுக்கொண்டனராதலின், அங்ஙனம் பெற்றுக்கொண்டபின்பு அப்பயனற்ற உடம்பாகிய சக்கை நீங்குதற்கு மகிழ்தல் செய்யாராய்ப் பரிவுறுவார்களோ?

"கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்,
துரும்பெழுந்து வேங்கால் துயராண் டுழவார்;
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர்"

என்னும் நாலடிப்பாட்டும் மேற்கூறிப்போந்தவற்றை வலியுறுத்தும்.

நம் பிறப்பின் முடிவுபெற ஓடி அலைந்து நெற்றிவேர் நிலஞ்சொட்ட இரத்தம்வற்ற நாடோறும் முயன்றும், அம்முயற்சியான்வருவனவற்றை நுகர்ந்தும், உறங்கியும்வருதலன்றிப் பிறிதொன்றும் இல்லையேல் இதனாற் போந்த பயன்றான் யாதோ? நினைத்தவற்றையே திரும்பவும் நினைத்தும், உரைத்தவற்றையே திரும்பவும் உரைத்தும், செய்தவற்றையே திரும்பவுஞ் செய்தும் வருதல் நம்மால் எத்துணைகாலம் அலுக்காது போற்றி வருதற்கியலும்? பழகியபாலும் புளிக்குமன்றோ? குந்தியபடியே நீண்டு குந்தியிருத்தலும் கூடுங்கொல்லோ? வாழ்தலும் அத்தகையதுவே,

இறப்பென்னும் ஒரு பெருந்தெய்வம் மேற்கூறிய அலுப்பை மாற்றி ஆதரவளித்துவருதலை அறியாதார் அறியாதாரே.

இறப்பிற்கஞ்சுவோர், நாட்டினலத்திற்கும் அஞ்சுவர்; தம்மைக் காக்கும்பொருட்டு நாட்டையும், சமயத்தையும் விற்றுவிடுவர்; தமக்குரிய காதல்சான்ற மகன் தீ முதலியவற்றிலே அகப்படினும் அங்கு விரைந்துபுக்கு மீட்டற்கெழுவரோ? இறப்பிற்கஞ்சும் இவ்விழி தகவுடையோர்.

உலகநலன்கருதி உடலையழிப்பதே மக்கட்பிறப்பானெய்தும் பயனாகவிருக்கவும், அப்பயனுக்குக் காரணமாய இறப்பினும் செம்மை செறிந்தது வேறுண்டோ? நாள்விழிப்பிற்கு இரவுத்துயில்வு எங்ஙனம் ஆறுதலளித்துவருகின்றதோ? அங்ஙனமே, வாழ்நாளின் பெருந்துயில்வாகிய இறப்பும் நமக்குப் பெரியதோராறுதலளித்துவருகின்றது.

இறப்பென்பது ஒன்றின்றேல் உயிர்ப்பன்மை மிக்கு உண்ணுதற்குணவுமின்றி இருத்தற் கிடனுமின்றிப் பசியும் பிணியும் நிரம்பிச் சமூகமெல்லாம் நலிந்துபோகும்.

களவினாலும்பழியினாலும் அறமுறைகோடி உடம்புநீக்கப்பெறுதலே அஞ்சத்தக்கது. நாடு முதலியவற்றின் நலப்பேற்றிற்கு இதனை விடுதலே வாழ்வாகவும், அங்ஙனம் விடாது வாழ்வதுவே சாதற் கொப்பாகாதோ?

நன்னெறிக்கே இறப்பதுதான் நல்வாழ்வு; தீ நெறிக்கே வாழ்வதுதான் தீச்சாவு; இது கருதியன்றோ,

"நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது"

என்று தமிழ்மறையும் இனிது முழங்கிற்று.

இறப்பினும் ஆக்கமும் இல்லை; இறப்பினும் காவலுமில்லை; இறப்பினுஞ் சிறந்ததோர் அறனுமில்லை; இறப்பினுஞ் சிறந்த அன்பும் அருளும் இல்லை. இறப்பே ஆண்மை. இறப்பே மெய்ம்மை. இறப்பே மங்கலம். இறப்பே இம்மையும் மறுமையும் ஆகும். இறப்பே ஞானமுமாகும்.

இருமையுங் காத்து நம்மீறறிருந்து வரும் இறப்பே நீ நீடூழி வாழ்க.

---

# யவன மஞ்சரி.

## அரிஸ்தாதில் எழுதிய ஒழுக்க நூல்.

[கசு0-ம் பக்கத் தொடர்ச்சி.]

### ஏழாம்பாகம். அடக்கமுடைமை.

#### முதல் அதிகாரம். அடக்கமின்மைபற்றிய அபிப்பிராயங்கள்.

சான்றோர்க்கு வெறுப்பினை விளைக்கும் மூவகை ஒழுக்கங்களாவன:- தீயொழுக்கம், அடக்கமின்மை, விலங்குத்தன்மை. இவற்றின் விரோதங்கள்:- அறம், அடக்கமுடைமை, தேவத்தன்மை. ஹோமரது இதிகாசத்திலும் பிறையம் தன்மகன் கெக்ரரை "இவன் மிகமேன்மையுடையவன், மனிதன்மகனல்லன், தேவகுமாரன்" என்றான் என்றார். மிருகங்களின் செயல்கள் இயற்கையுணர்வின்வழியாதலால் நிச்சயிக்கப்படாதவை. ஆகையால் அச்செயல்களைத் தீயொழுக்கம் நல்லொழுக்கம் என வகுப்பாரில்லை. மிருகங்கள் புண்ணிய பாவம் செய்பத்தகுதியில்லாதன. தேவச்செயல்கள் அறத்தினும் மேன்மையுடையன. தேவத்தன்மை அருமையாகத்தோற்றுவதுபோல விலங்குத்தன்மையும் ஒருவாறு அருமையாகத் தோற்றும். நாகரிகமில்லாச்சாதியினர் விலங்குத்தன்மையுடையவர். பிணியும் ஒருவனுக்கு விலங்குத்தன்மையை உண்டாக்கும். தீயொழுக்கத்தில் ஒருவன் மிகினும் விலங்குத்தன்மையெனப்படும். நல்லொழுக்கமும் தீயொழுக்கமும் அல்லாத மென்மை வன்மை அடக்கமுடைமை இன்பவாழ்க்கை முதலியவற்றை ஆராய்வோம்.

வழக்கம்போல உலக அபிப்பிராயங்களைக்கூறி ஆசங்கித்துப் பரிகரித்து உண்மையானவற்றை வலியுறுத்துவாம். (1) அடக்கமுடைமையும் வன்மையும் புகழப்படுவன. (2) அடக்கமுடையவன் அளவு கடவாதொழுகுபவன் என்பது ஐதிகம். (3) புணர்ச்சிவிரும்பல் பகுத்தறிவின்கட்டளைக்குச் செவிகொடாதன்மை. புணர்ச்சியுவகையில் அளவுநோக்காதவன் மெய்ப்பாட்டின் ஏவற்படி ஒழுகுபவன். அவனுக்கு அது தீயதெனத் தெரிந்தும் அவ்வாறு புலன்வழிச்செல்வன். (4) சமனறிந்து சிவிப்பவன் அடக்கமுடையவன், அதை வன்மையென்போம்.

கீழ்மைக்குக்காரணம் அடக்கமின்மையென்றும் அடக்கமின்மையும் கீழ்மையும் பரியாயப்பெயர்கள் என்றும் பலவாறுகூறுவர். (5) விவேகி யாண்டும் அடக்கமுடையவனுயிருப்பன். விவேகிகளிற் சிலர் அடக்க மில்லாதவரென்றும் சிலர் மொழிவர். (6) அடக்கமின்மைக்குக் காரணங் கள் கோபம் மானம் பயம் இன்பம் முதலியவை.

2-ம் அதிகாரம். நிச்சயித்தலும், அடக்கமின்மையும்.

ஒருவன் அளவுகடத்தலின்வரையறையை எவ்வாறறிவன். "நல் லொழுக்கத்தின் இலக்கணம் அறிந்தவன் ஒருபோதும் அளவுகடவான். அடக்கமில்லாமை என்னும் குணமே இவ்வுலகிலில்லை. ஏனெனில் அறி யாமையினுற்றான் ஒருவன் பிழைசெய்கிறுன். தான் செய்யும் செயல் பிழையென ஊகித்தறிந்தானுயின், அவன் அதைச் செய்யான் என்பர் சோக்கிறேற்றிஸ். இக்கூற்று அனுபவத்தோடு மாறுகோள் என்ப தைச் சிந்தித்தறிக. அறியாமைகாரணமாக ஒருவன் புணர்ச்சிவிதும் பினுயின் அது எவ்வித அறியாமை என்பதை ஆராயவேண்டும். மோக மாகியமெய்ப்பாடு நிகழும்போது அவ்வடக்கமின்மையை நல்லொழுக்க மென்றே நினைக்கிறுன். சிலர் அடக்கமின்மைக்குக் காரணம் அறிவன்று அபிப்பிராயமென்பர். மேலும் மோகமாயிருக்கும்போது ஒருவனுக்கு உண்மையறிவு இல்லையென்பர். இனி, விவேகி இத்தவறிழையான். அவனுக்குக் கடும்பற்றில்லை. அப்படியாயின் ஆசையை அடக்குவது விவேகமென அறையலாமோ? அறியாதவினுவினேம். அது பெரும் மடமை. என்னை? அடக்கமின்மையான் மோகத்தின்வழியொழுகும் போதும் விவேகம் ஒருவனை அவ்வழி ஏகவிடாமற் றடைசெய்கிற தல்லவா? அடக்கமின்மையால் அவன் விவேகத்தை அதட்டி மோகத் தின்வழி ஒழுகுகிறுன். ஆகையால் அடக்கமின்மையும் விவேகமும் ஒருவனிடத்தில் ஒரே அமயத்தில் உண்டாயின் அப்போது விவேகம் ஆசையை அடக்குமென்பது பிழைபல்லவா? விவேகம் அடக்குமாயின், அடக்கமின்மை உடனே அற்றுப்போவதால் விவேகமும் அடக்கமின்மை யும் ஒருங்குநிகழா.

அடக்கமுடைமை எல்லாநேரமும் நல்லதன்று. சோபிஸ் எனப் படும் கிரேக்கர் (குதர்க்கம்பேசுவோர்) மனிதரை மயக்குந்தன்மையான அந்துவயங்களை உண்டாக்கிப் பிரதிக்ஞைகளை மொழிவர், கேட்போர்

அப்பிரதிக்ஞைகளைப் பிழையென நினைத்தாலும் போலியேயெனத்தெரியாமையால் மௌனமாயிருப்பார். உதாரணம்:- 'பேதைமையும் அடக்கமின்மையும் ஒருவன் குணங்களாயின், அவை ஒரு அறமாகப் பரிணமிக்கும். நன்மை இதுவெனத்துணிந்தபின் அளவுகடந்து ஒழுகுவதால் அந்நன்மைக்கு விரோதமானதைச் செய்கிறான். இது தீயசெயல். ஆனல் பேதைமையென்னும் பண்புடையனாகையால், நல்லதைத் தீயதென்றும் தீயதை நல்லதென்றும் நிச்சயித்திருப்பன். இவ்வாறு இருமுறை பிழைசெய்வதால் அச்செயல் நன்மையாகும்.' இதன் போலிநியாயம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். அடக்கமின்மையாற்செய்த தீச்செயல் அவனது பேதைமையின்காரணமாய் இழிவானசெயலாய்த் தோன்றுவதொழிய நல்லசெயலாகப் பரிணமியாது. ஒருவன் ஒரு செயலைச் சரியெனநினைத்துச்செய்யும்போது அது பிழையாயினும் அவனை இலகுவாக நல்வழிப்படுத்தலாம். ஆனல் பிழையென அறிந்தபின் ஒருவன் அச்செயலைச்செய்வானாயின் அவனை எவ்வாறு திருத்தலாம். இது ஒரு பழமொழியை நினைவுறுத்துகிறது. "தண்ணீர் விக்கிக்கொண்டால் வேறு எதனாற்கழுவித் தடையை மாற்றலாம்." எல்லாச் செயல்களும் அடக்கமேனும் அடக்கமின்மையேனும் காரணமாகவே செய்யப்படுவன. அடக்கமின்மை தீயொழுக்கமென்பதை ஆராய்ந்து ஆசங்கைநீக்கி உண்மைகடைப்பிடிப்பாம்.

### 3-ம் அதிகாரம். அறியாமையும் அடக்கமின்மையும்.

நாம் இங்கே ஆராயவேண்டியவை: (1) முதலாவதாக, அடக்கமில்லாமல் அறியாமைகாரணமாகச் செய்கிறானே? என்றேனும் அல்லது அறிந்தும் அக்குற்றத்தைச்செய்கிறானே? என்றேனும் ஆராய்வோம். (2) அடக்கமுடைமையும் இன்மையும் எவ்வகைச்செயலில் நோக்குகிறோம்? (3) வன்மையும் அடக்கமுடைமையும் ஒரு குணமோ? அறிவின்கட்டளைக்குக்கீழ்ப்படாமல் அளவுகடப்பவன் தூர்த்தன். அறிந்தும் ஒருநோக்கத்திற்காகத் தீயசெயலைச்செய்கிறவன் தூர்த்தன். அடக்கமில்லாதவனுக்குத் தான்செய்கிறது பிழையெனத்தெரிந்தும் செய்கிறான். சாதாரண மனிதர்களது அறிவிற்கும் அபிப்பிராயத்திற்கும் பேதமில்லை. சோக்கிறிற்றஸ் போலச் சிலர் தம்மபிப்பிராயமே உண்மையெனக்கொள்வர்,

இனி அறிவுடையனுயிருத்தற்கும் அறிவை உபயோகிப்பதற்கும் வித்தியாசமுண்டு. பூர்வசாதனமாகிய தாட்டாந்தமாக அறிவின் உண்மையொன்றை மொழிந்தாலும் அதனைக்குறித்த ஏதுவினுடன் அவ்வுண்மையை உற்றுநோக்காவிடின் முறையான சாத்தியம் ஒருபோதும் பெறப்படாது. அறிவுடைமையென்பது பலபொருள் உடைத்து. அறிவுடையவனிடத்தும் மதுபானஞ்செய்த மயக்கநிலையிலும்நித்திரையிலும் பைத்தியநிலையிலும் சுத்த அறிவு நிகழாது. காமமும் வெகுளியும் அறிவை மழுங்கச்செய்யும். அடக்கமில்லாதானுக்கும் இம்மயக்கஅறிவு உண்டு. மெய்ப்பாட்டின்வழி அறிவு மயங்கிநிற்பப் பிழையைச்செய்யும்போதும் சிலர் அப்பிழையைத் தீயஒழுக்கமென வற்புறுத்தும் எம்படோக்கிஸ் என்பவரது பழமொழிகளைப் பிதற்றுவர். கூத்தில்நடிப்போர் சொற்கள் உணர்த்தும்பொருளைச் சிந்தியாமற் சொற்களைச் சொல்வதுபோல இத்தகையோரும் பழமொழிகளைச் சிந்தியாது மொழிவர். மெய்ப்பாட்டுநிலை அந்நிலையைக்குறிக்கும் நோக்கமொன்றைத்தவிர மற்றைய அறிவெல்லாவற்றையும் மயக்கிவிடும். ஆனதுபற்றிச் சோக்கிரேற்றிஸ் "மோகத்தில் சிந்தனையாகிய அறிவில்லை, ஒருவிதமெய்ப்பாட்டுணர்ச்சியே உண்டு" என்று சொல்லுவர்.

### 4-ம் அதிகாரம். அடக்கமின்மையும் தீயஒழுக்கமும்.

அடக்கமின்மையென ஒரு சிறப்புத்தீயொழுக்கமுண்டோ? இன்பதுன்பங்களிலே அளவுமிகுவதும் குறைவதும் அடக்கமின்மை சிற்சில இன்பங்கள் அவசியமானவை. சிலவற்றில் மிகுதி கண்டிக்கப்படும். ஊன்உண்பதால் விளையும் இன்பமும் புத்திரப்பேற்றால் விளையும் இன்பமும் மனிதனுக்கு இயற்கையின்பங்கள். மேலும் வென்றி மானம் பணம் இன்பம் என்பவை விரும்பப்படுவன. இவற்றில் அளவுமீறி ஆசைப்படுதலை அளவுகடத்தல் என்பாரில்லை. பெரும்பாலும் அளவுகடத்தல் என்பது ஊறும் சுவையும் காரணமாகத்தோற்றும் இன்பங்களிலேயே தோன்றும். இவ்வாறு ஊற்றிலும் சுவையிலும் அதிகஇன்பம் விழைதல் மென்மையெனப்படும். மென்மைத்தன்மை பகுத்தறிவின்கட்டளையைப் பொருட்படுத்தாது.

சில ஆசைகளையும் சில இன்பங்களையும் நல்லவை என்போம்; சிலவற்றைத் தீயவைகள் என்போம்; சிலவற்றை நல்லவுமல்ல தீயவு

மல்ல என்போம். பணம் வெற்றி மானம் நயம் முதலியவற்றில் ஆசைப் படுதல் குற்றமன்று. எனினும் காலம் இடம் வகை வழி தெரிவதிற் குற்றம் வருதல் உண்டு. நயோபி என்பவள் தன்பிள்ளைகளிடம் அதிகப்பற்று உள்ளவள்; ஆகையால் தேவர்களுடனும் பகைக்க நேரிட்டது. அதை நாம் குறையாகக்கொள்வோம். சற்றீறஸ் என்ப வன் தன் தந்தைமேல் அளவிலா அன்புபாராட்டிப் பெரும் பேதைமை யான செயல்களையும் செய்தான். இவற்றைத் தீய ஒழுக்கமென்பாரை யாம் அறியேம். அடக்கமின்மை தீயொழுக்கத்திற்கே காரணமாவ தொழியத் தீயொழுக்கமன்று.

## 5-ம். அதிகாரம். இயற்கைத் தீக்குணங்கள்.

சில இன்பங்கள் இயற்கையாகவே இன்பமானவை. இவற்றினும் சில சிலவகுப்பினர்க்குமாத்திரம் இன்பமானவை. சிற்சில எத்தகை யோர்க்கும் இன்பமானவை. தீயகுணத்திற்கு மூவகைக்காரணம் கூற லாம். (1) இரத்தக்கேடு (அவயவங்கெடுதல்), (2) பழக்கம், (3) இயற்கை யாகவே தீயகுணமுளதாதல். இயற்கையாகவே தீயகுணமுடை யோர் கொடும்பாதகங்களைச் செய்வார். கட்டுரைகளிற் பல தீயகுண முடைய பிராணிகளைப்பற்றிப் புலவர்கள் புனைந்துரைக்கின்றனர். பெண் போலும் தோற்றமுடைய பிராணி ஒன்று கருப்பாசயத்தைக்கிழித்துக் கருப்பத்தை யுண்பதில் இன்பமுடையது. கருங்கடற்பக்கங்களில் வசிக்கும் சில சாதியார் மனிதரின் இறைச்சியைச் சாப்பிடுவர். தங்கள் குழந்தைகளையும் பாகம்பண்ணி விருந்துகொண்டாடுவது அவர்வழக்கம். இது விலங்குத்தன்மை. பிணியின் வருத்தத்தினாலும் பைத்தியத்தின் வருத்தத்தாலும் ஒருவன் தன் தாயைக் கொன்று தின்றான். ஒரு அடிமை தனது நண்பனாகிய வேறொரு அடிமையின் ஈரலை உண்டான். இவையெல்லாம் இயற்கைத் தீக்குணங்கள்.

இனி, பழக்கத்தாலும் தீயசெயலைச் செய்கிறோம். மயிரைக்களை வது நகத்தைக்கடிப்பது சாம்பல் மண் முதலியவற்றை உண்பது போலும் ஒழுக்கங்கள் நோயால் விளைவன. சிலர் இயற்கைக்கு விரோத மான முறைகளிற் காமவருத்தத்தைத் தீர்ப்பர். இது பழக்கத்தாற் செய்யப்படுவது. பெண்கள் மக்கட்சாதியைப் பெருக்குவதில் இன்புறு வர். அது இயற்கையாகையாற் குற்றமன்று.

இனிப் பேதைமை, கோழைத்தன்மை, கீழ்மை முதலியவற்றிலும் அளவுகடத்த லுண்டு. ஒருவன் ஒரு சுண்டெலிக்குப் பயந்து ஓடியது பெருங் கோழையாகி, மனிதர்செயலன்றாய் விலங்குத்தன்மையாகும். மனிதவர்க்கத்திலும் பகுத்தறிவில்லாத விலங்குத்தன்மையர் பலர் உளர். பலாறிஸ் ஒருநாள் ஒரு குழந்தையின்மாமிசத்தை உண்ண ஆசைப் பட்டான். பலாறிஸ்போலச் சிலர் சிலதருணத்தில்மாத்திரம் விலங்குத்தன்மையாய் ஒழுகுவர். சிலநேரத்தில் இதை அடக்குவர். அடக்கமின்மை தூர்த்தகுணத்திலும் அளவுகடத்தலிலும் குறிக்கப்படுமாகையால் ஐம்புலவின்பத்தை அடக்குவதே அடக்கமுடைமை.

## 6-ம் அதிகாரம். வெகுளி தீயொழுக்கமன்று.

வெகுளியில்மிகுதலிலும் ஒரு ஆசையில்மிகுதல் குறைவாகக்கொள்ளப்படும். ஆசை என்பது அன்னமயகோசத்தால்வேண்டப்படுவது,— பசிக்கும்போது உணவுதேவைப்படுதல்போல. வெகுளி சடுதியாய் உண்டாகும் மெய்ப்பாடு. வெகுளி பகுத்தறிவின்வழி ஒழுகுந்தன்மைத்து. ஊனில் அதிகமாய் விரும்புதல் இயற்கைக்கு விரோதமான குணம். ஊனைவிரும்புதல் பிழையானசெயல் என்று நாட்ட நாம் எத்தனிக்கவில்லை. அளவுக்கு மிஞ்சி ஊனில் ஆசைப்படுதல்கூடாது என்பதையே கருதினேம். ஆசை தெரிந்துசெய்யப்படுந் தன்மையுடைத்தாகலால் தெரிவில்லாததாய்த் தற்செயலாய்ச் சடுதியாக உண்டாகும் வெகுளியினும் அது இகழத்தக்கது. வெகுளியின்தன்மை சரசரப்பைக் கேட்டவுடன் நண்பனோ அன்றோவென ஆராயாது குரைக்கும் நாயினதுதன்மைக்கு ஒப்பிடப்படும். மேலும் ஒரு ஆசை இன்பம்விளைக்கத்தகுந்ததென மனம் ஊகித்ததாயின் அவ்வின்பத்தை அனுபவிக்க ஆவற்படும். மனத்தினது ஆவலை வேலைக்காரன் ஒருவன் எசமானின் ஏவலைச் செவ்விதாகக் கேட்குமுன்னரே, அவ்வேவலைச் செய்துமுடிப்பதற்காக அவசரப்பட்டு ஓடுவதற்கு உவமிக்கலாம். வெகுளி பெருங்குற்றமன்றென்பதை இன்னமும் விளக்குவேம். ஒருவன் தன் தகப்பனைப்புடைத்தபோது சொன்னதாவது:— "என் தகப்பன் தன்தந்தையையடித்தவர், எனது மகனும் வாலிபப்பிராயமெய்தியபின்பு என்னை அடிப்பான். இது எங்கள் குலத்தின் குணம்." வேறோர்கதையில் கதவண்டைமட்டும் இழுக்கப்பட்ட தகப்பன் மகனுக்குச்சொல்லியது:— "இக்கதவண்டையில்

என்னை நீ விட்டுவிடு, ஏனெனில் கதவிற்கப்பால் நான் எந்தகப்பனை இழுக்கவில்லை" என்பதாம். கோபமுடையவன் வஞ்சகனல்லன். ஒருவன் பொறுமைப்பட்டு வஞ்சித்துத் தீங்குசெய்வது தீயகுணம். வஞ்சனை ஆலோசித்தே செய்யப்படும். அபுரோடிற்றி என்னும் தேவதையைச் "சைப்பிரஸ் என்னும் தீவின் வஞ்சனை இழைக்கும் மகள்" என்றும் "அவளது மேகலை ஞானிகளின் மனசையும் கவரத்தக்க அழகுடைத்து" என்றும் இசைத்தனர் ஹோமர்.

இவ்வாசைகளுக்கும் இன்பங்களுக்கும் என்ன வேற்றுமை என்பதைக் குறிப்பேம். முன்னர்க்கூறியவாறு ஆசைகள் சிலமக்கட்கு இயற்கையாக உண்டு; சில மக்களது விலங்குத்தன்மையைக் குறிப்பன. ஏனைய சில பிணியால் விளைவன. இயற்கையான ஆசைகளில் அளவு கடத்தலே தூர்த்தாதுசுபாவம். மிருகங்கள் பெரும்பாலும் அளவு நோக்காது எவ்வளவு இரையைக்கொடுத்தாலும் சாப்பிடுவன. விலங்குத் தன்மை யென்பது நற்குணமின்மை. தீயொழுக்கமென்பது நற்குணங் குறைதல். ஆகையால் மனிதனது விலங்குத்தன்மை தீயவொழுக்கத்தினும் கொடியது. தீயொழுக்கத்தையும் விலங்குத்தன்மையையும் ஒப்பிட்டு எது தீயதென ஆராய்வது அஃறிணைப்பொருளை உயர்திணைப் பொருளோடு ஒப்பிட்டுக் குணநயம் நோக்குவதுபோலும்.

## 7-ம் அதிகாரம். மென்மையும் தூர்த்தகுணமும்.

மென்மை என்பது ஊற்றிலும் சுவையிலும் அளவின்மிகுந்து இன்புறுதல், வன்மை ஊற்றிலும் சுவையிலும் அளவிற்குறைந்து ஐம்பொறிகளை ஒடுக்குதல், இன்பம்விழைதலில் மிகுதல் தூர்த்தகுணம். இன்பத்தில் மூழ்கியபின் துக்கப்படாதிருத்தல் மிகவும் கீழ்மை. ஆசையால் தூண்டப்படாமல் ஒரு தீயசெயலைச் செய்கிறவன் இயற்கைத் தீக்குணமுடையவன். ஒருவன் சத்துவகுணத்தனுய் ஒருவனைப் புடைப்பானுகில், கோபம்வந்துற்றகாலை என்னகொடுமைதான் செய்யான். மென்மை என்பது சாதாரணமனிதர் வெறுப்பனவற்றை வெறுக்க இயலாது விரும்புதல். ஒருவன் தனது ஆடையை நிலத்தில் இழுபடவிடுவது மென்மை என்பர். பிலோக்கிளேற்றிஸ் ஒரு பாம்பாற் றீண்டப்பட்டபோதிலும் துன்பத்தை மறைத்தான். இது வன்மை. செனபான்றிஸ் ஓரமயத்தில் தன் சிரிப்பை அடக்கமுயன்றும் இயலாது

சிரித்தான். இதுவும் வன்மை. அடக்கமுடியலாது உடனே சிரித்தானுயின் மென்மையெனக் கூறப்பட்டிருக்கும். பெண்கள் ஆடவரினும் பிறப்புக்காரணமாகவே மென்மைக்குணமுடையவர். இயற்கையாகவே சிதியதேசத்து அரசர்கள் மென்மைவிரும்புவோர். பொழுதுபோக்குவது தூர்த்தகுணமன்று, அது உள்ளநெகிழ்ச்சியாதலால் மென்மை என்ப. தூர்த்தன் மனந்திரும்பித் துக்கப்படுவது அருமை. கீழ்மக்கள் நற்செயலென்றுநினைத்தே தீச்செயலைச் செய்கிறார்கள். கீழ்மக்கள் ஆலோசித்து நிச்சயித்துத் தீச்செயலைச் செய்வர். அடக்கமில்லாதவர் ஆலோசியாமல் அங்கோத்து ஆசையின்வழி ஒழுகுவர். அடக்கமில்லாதவர் மெய்ப்பாட்டுணர்ச்சியும் மனோபாவனையும் ஏவுவனவற்றைச் செய்து அலைவர்.

## 8-ம் அதிகாரம்.

### தூர்த்தகுணத்திற்கும் அடக்கமின்மைக்குமுள்ள பேதம்.

தூர்த்தன் தன் தீயொழுக்கத்திற்காகத் துக்கப்படுவது அருமையென்றோம். அடக்கமில்லான் ஆலோசியாமல் புலன்வழிச்சென்றமையால் இடையிடையே துக்கப்படுவன். தூர்த்தகுணம் க்ஷயம், நீரிழிவு முதலியநோய்கள்போல மாற்றமுடியாதகுணம். அடக்கமின்மை வலிபோல மாறக்கூடியது. கொஞ்சம் திராட்சைரசம் பருகியவன் வெறியால் மயங்கியும் பின்னர்க் கெதியாக மயக்கந் தீர்ந்து சுயநிலையடைவதுபோல, அடக்கமில்லான் சிறு ஆசைகளில் பந்தப்பட்டுப் பகுத்தறிவின்வலியால் அப் பற்றைக் கெடுத்தவழி அடக்கமுடையவனுவான். நிச்சயித்து இவ்வாறு ஒழுகாமையால் அடக்கமின்மையைத் தீயொழுக்கமன்று; தீயொழுக்கத்தின் காரணம் என்றோம். எங்ஙனமாயினும் அடக்கமின்மையின்பயனுகிய தீயொழுக்கம் துன்மார்க்கமே. தூர்த்தன் துன்மார்க்கத்தைச் சன்மார்க்கமெனநினைத்துத் தான்செய்வதை ஆராய்ந்து தெளிந்து வினையாள்கிறான். அடக்கமில்லான் தான் செய்வதைப் பிழையென அறிந்தும் புலனை ஒடுக்கவியலாமல் இன்பங்களில் அளவுகடக்கிறான். அடக்கமில்லோனை இலகுவில் நல்வழிப்படுத்தலாம்; தூர்த்தனை நல்வழிப்படுத்த இயலாது.

## 9-ம் அதிகாரம். மூர்க்கமும் அடக்கமுடைமையும்.

தீர்மானித்தவாறு ஒழுகுவதும் அடக்கத்தின்வழி ஒழுகுவதும் வேறு. எத்தகையமனிதனை அடக்கமுடைய னென்போம்? நோக்கந் தெரிந்துசெய்வோரெல்லாம் அடக்கமுடையவரல்லர். யாவர் நோக்கம் ஒன்றைத் தெரிந்து, ஆலோசித்து நிச்சயித்துச் சரியெனத்தீர்மானித்துச்செய்கிறாரோ அவரே அடக்கமுடையவரெனப்படுவர். மூர்க்கன் கொண்டதை விடான். ஆகலின் மூர்க்கனை அடக்கமுடையவன் என்பது தவறு. தமதபிப்பிராயமே சரியெனக்கொள்வோரும், அறிவீனரும், நாகரிகமில்லாதவரும் மூர்க்கரே. தங்கள் அபிப்பிராயங்களைப் பிறர் ஏற்காவிடின் மூர்க்கருக்குக் கோபம்வரும். சோபோக்கிள்ஸ் எழுதிய பிலோக்கிரேற்றிஸ் என்னும் நாடகத்தில் நியோப்தேலோமஸ் என்னும் பாத்திரம், இன்பம் நிமித்தமாகநின்று தூண்டத் தன்தீர்மானத்தைப் பொருட்படுத்தாது ஒழுகினன். ஐம்புலவின்பங்களிலும் அளவிலும் குறைதல் அடக்கமுடைமையென்றே சொல்வேம். மூர்க்கம் ஒருவனது அறியாமையைக் காட்டும். அது ஒருவகைப் பேதைமை.

## 10-ம் அதிகாரம். சூழ்ச்சியும் விவேகமும்.

அடக்கமில்லாதவன் விவேகியாதல் அரிது. விவேகம் எப்போதும் நல்லொழுக்கத்தை நாடும். விவேகி தன் அறிவின்வழி ஒழுகுவன். அடக்கமில்லான் புத்தியை அதட்டிப் புலன்வழிச்செல்வன். அடக்கமில்லான் தன் ஆசைகளை நிறைவேற்றுதற்கு வழிகளைத்தேடுவதில் கெட்டித்தனங்காட்டுவான். விவேகமும் சூழ்ச்சியும் வெவ்வேறு; விவேகம் நோக்கமுடையது; சூழ்ச்சி நோக்கத்தின் துணைக்காரணமாய் வழிவகைகளை ஆராய்வது. அடக்கமில்லாதவன் வஞ்சகனல்லன். அவனை நல்ல தீர்மானங்களைச்செய்து அதன்வழி ஒழுகாத அரசர்க்கு ஒப்பிடலாம் என்பர் அலெச்சான்டிறைடிஸ். தீயோரைத் தவறுப் பிரமாணங்களை நிச்சயித்து அப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படிந்தும் கீழ்ப்படிவித்தும் ஒழுகும் அரசர்க்கு உவமிக்கலாம். யுயேனஸ் என்பவனின் பழமொழி ஒன்று வருமாறு:— "பழக்கம் இயற்கைபோலும்; பழக்கத்தை இலகுவாய் மாற்றவியலாது."

4

இதுகாறும் மென்மை வன்மை அடக்கமுடைமை அடக்கமின்மை என்பவற்றை ஆராய்ந்தோம். இனி இன்பத்தைப்பற்றிய அபிப்பிராயங் களைக்குறிப்போம்.

[பதினொராம் அதிகாரமுதல் இவ் வேழாம்பாகம் இறுதிவரையும் கூறப் படும் இன்பத்தைப்பற்றிய அபிப்பிராயங்களைப் பத்தாம்பாகத்தை வாசிக்கும் போது வாசிப்பது பயனுடைத்தாகும். இப் பத்தாம்பாகத்து இன்பவாராய்ச்சிக்கு இங்கே குறிக்கப்படும் குறிப்புக்கள் முகவுரைபோலும்].

### 11-ம் அதிகாரம். இன்பம் தீமைபயப்பது.

இன்பத்தைப்பற்றிய அபிப்பிராயங்களை ஆராய்வோம். இவ் இன்ப வாராய்ச்சியும் எமது சாஸ்திர எல்லைக்குட்பட்டதாகலாற் செய்யப்படும். நல்லொழுக்கம் இன்பத்துடன் நெருங்கியசம்பந்தமுடைத்தாகலான் நாம் இன்பத்தினது சொரூபத்தை ஆராயவேண்டும். சிற்றின்பத்தைச் சிலர் சந்தோஷமென்பர்; அது தவறு. (1) ஒருசாரார் நன்மைவேறு இன்பம்வேறென்றும், இன்பம் ஒருபோதும் நன்மையாகாதென்றும் மொழிவர். (2) ஒருசாரார் சிலஇன்பங்கள் நல்லவை என்றும் பெரும் பாலும் இன்பங்கள் தீயன என்றும் உரைப்பர். (3) மற்றொருசாரார் எந்த நன்மையும் இன்பமாயிருப்பினும் மகாநன்மை இன்பமாகாதெனச் சாதிப்பர். பின்சொல்லப்படும் ஏதுக்களால் இன்பம் நன்மையன்றென வாதிக்கின்றனர்.

(அ) இன்பம் ஒரு புடைபெயர்ச்சி (அசைவு) ஆகிய ஒரு நிலை மாறுதல். மாறுதல்நிலையினும் மாறுதலில்லாத முடிபுநிலை நல்லதென் பர். குடிபுகுந்தவீடு -கட்டப்படும்நிலையிலிருக்கும்வீட்டினும் நல்லது. (ஆ) அளவுநோக்கும்மனிதர் இன்பத்தைத் தவிர்க்கின்றனர். (இ) இன்பத்தைக்கருதாது துன்பமீக்கத்தையே விவேகி நோக்குகிறான். (ஈ) இன்பமிலை சிந்தனையைத் தடுப்பது. புணர்ச்சிபுவகையில் மயங்கியிருக்கும் போதும் சிந்தித்தல் இயலாது. (உ) இன்பத்தைப் பயிற்சிபண்ணும் கலைஞானம் ஒன்றில்லை. இன்பம் ஒழிந்த மற்ற நன்மைகள் ஒவ் வொன்றற்கும் ஒரு கலைஞானப்பயிற்சி காண்கிறோம். (ஊ) குழந்தைக ளும் மிருகங்களும் இன்பத்தை நாடுகின்றன. இவற்றான், இன்பம் விரும்பப்படாதது எனக் காட்டுவர்; இது முதலாம் கட்சியாரது கொள்கை.

இனி இரண்டாவதுகூற்றின்படி சில இன்பங்கள் இகழப்படுவன ஆகையால், அவை கூடாதன.

மூன்றும் கூற்றின்படி ஒரு பயிற்சியினும் பயிற்சியின்முடிவாகிய நிலை விரும்பப்படுவதாகையால், பயிற்சியாகியஇன்பம் நன்மை ஆகாது. பிரயாணம்செய்வதிலும் பிரயாணத்தில் நோக்கிய இடத்தை அடைவதே இன்பமுடைத்து.

12-ம் அதிகாரம். இன்பம் தீமை என்பதின் மறுப்பு.

மேற்கூறிய நியாயங்களால் இன்பம் தீமையெனக்காட்டப்படவில்லை. நன்மைகள் இரு பெரும் பிரிவுடைய. (1) பரமநன்மை—மற்றும் பொருள்களுடன் ஒப்புநோக்கில் நன்மையெனப்படாமல் தன்னியல்பிலே ஒரு நன்மையாயிருப்பது, பூரணநன்மை. (2) அபூரணநன்மை ஒப்புநோக்கி இது இதனிலும் நல்லது. இது இக்காரணத்தால் எமக்கு இந்நோக்கு நல்லது. ஒருபொருள் மற்றொருபொருளினும் வெண்மையானது, ஆகையால் இது வெண்மை. முந்தியது சொரூபத்தால் நன்மையாதலும் பிந்தியது ஒப்பால் நன்மையாதலும் அறிக. இனி ஒழுக்கம் குணம் தத்துவம் பயிற்சி முயற்சி முதலியன எல்லாம் நன்மைகள் என நாம் சொல்லும்போதும் இருபொருளில் நன்மையாகும். மனசினது அசைவுகளும் நிலைகளும் இன்ப துன்பத்தைப் பயக்குந் தன்மையன. சில ஆசைகள் சிலர்க்கு நன்மையாயிருப்பதுமுண்டு; சில எவர்க்கும் நன்மையன்றாயிருக்கும். எங்கள் ஆற்றல்களை வலியுறுத்தும் முயற்சி இன்பமுடைத்து. எமது தேவைகளை நிரப்புதலால் அதிகம் இன்பம் விளையாது. பசிதீர்ப்பது ஒரு இயற்கையாகியதேவையைத் தீர்த்தல். இம்முயற்சியில் நாம் இன்புறுவதில்லை.

இன்பத்திலும் வேண்டத்தக்கது ஒன்றுண்டு. ஒரு பயிற்சிநிலையிலும் பயிற்சியின் பயனைநோக்குதல் இன்பமுடைத்து. இன்பம் பயிற்சி நிலையன்றாகலான் மாறுதலடையும் நிலையன்று. அன்றியும் இன்பம கலைஞானப்பயிற்சியுமன்று. இன்பம் மனத்தினது ஒரு முயற்சி. ஒரு சத்தியின் முயற்சி ஒவ்வொன்றும் தன்னில் முடிபு. ஒன்றைச்செய்வதில் இன்புறுவதொழிய, ஒன்றாய் மாறுவதில் நாம் இன்புறுவதில்லை. சிலர் இன்பத்தை ஒரு மாறுதலாகியநிலை என்பர். அவாது அந்நுவயம்

வருமாறு:— நன்மை என்பது ஒருசத்திப்பயிற்சி. பயிற்சி என்பது ஒரு மாறுதல்நிலை. இன்பம் ஒரு மாறுதல்நிலை என இவ்வாறு கருதப்பட்டது. இன்பம் மாறுதல்நிலையாகலான் அது தீமை என்பர். இது போலிநியாயம். பயிற்சியும் மாறுதல்நிலையும் ஒருபொருட்கிளவியன்று. மேலும் இன்பம் ஒரு முயற்சியொழியப் பயிற்சியன்று. இன்பம் முயற்சியாதலால் நன்மையாதல்கூடும்.

இனிச் சிலர் இன்பம்விளைக்கும் பண்டங்கள் சுகவீனத்தைவிளைப்பதால் இன்பம் தீயதென்பர். தேகசௌக்கியத்தைப்பயக்கும் சிலபண்டங்கள் பெரும்பாலுமில்லையாதலால் தேகசௌக்கியம் கூடாது என்பதனுடன மேற்கூறியது ஒக்கும. தத்துவஞானப்பயிற்சியும் தேகத்தை மெலியப் பண்ணுவதால் விரும்பப்படாதென்பர் போலும். வேறுசிலர் இன்பம் சிந்தனையைத் தடைசெய்கிறதென்பர். ஒரு சத்திப்பயிற்சியால் வரும் இன்பம் அப்பயிற்சியை ஒருபோதும் தடைசெய்யாது. கல்விப்பயிற்சியானுப இன்பம் நாம் கலவியைக்காமுறுதற்கு ஏதுவாயிருக்கிறது. வேறுசிலர் இன்பத்தைப் பயிற்சிபண்ணும் கலைஞானமில்லை என்பர். கலைஞானம் ஒருமுயற்சியை உண்டாக்குவதன்றிப் பொருளையே உண்டாக்குவது. இது பெரிதும் பொருத்தமுடைத்து. இன்பப்பயிற்சிக்காகிய பல கலைஞானங்கள் உண்டெனினும் ஒக்கும். வாசனைக்கூட்டுச் செய்யும் கலைஞானமும் பாகம்பண்ணுதலைப் பழக்கும் கலைஞானமும் இன்பத்தை நிமித்தமாகவுடையன. இனிக் குழந்தைகளும் விலங்குகளும் சிற்சில இன்பத்தையே நாடுகின்றனவாகையால் இன்பம் எல்லாரானும் விரும்பப்படாதது. அளவுகடவாதொழுகுபவர் புலவின்பங்களை விலக்கி மேலானமையான இன்பங்களில் இன்புறுவாழ்வர்.

## 13-ம் அதிகாரம். இன்பம் நன்மை என்பது.

இனித் துன்பம் விரும்பப்படாததும் வெறுக்கப்படுவதும் என்பது யாவர்க்கும் ஒப்பமுடிந்ததோர் உண்மை. சிலர் துன்பம் தன்னியல்பிலேயே கூடாததென்றும், சிலர் சத்திப்பயிற்சியாகிய முயற்சியைத் தடைசெய்வதால் கூடாததென்றும் கூறுவர். யாது ஆன்மாவின்முயற்சியைத் தடைசெய்கிறது, அது கூடாதது. துன்பம் வெறுக்கப்படுவது. வெறுக்கப்படுவதற்கு விரோதமானது விரும்பப்படுவது. ஆகையால் துன்பத்தின் விரோதமாகிய இன்பம் விரும்பப்படுவது. இங்ஙனம்

இன்பம் நன்மை என்பது பெற்றும். செயுசிப்பஸ் மேற்கூறியநியாயத்தை மறுத்து வாதிப்பர். அவரது கொள்கை இன்பமும் துன்பமும் விரோதமானவையல்ல. இன்பத்திற்கும் துன்பத்திற்கும் விரோதம் இரண்டற்கும் இடையிலிருக்கும் நொதுமல்நிலை; [(இங்கே நூலுரையிற்கூறப்படும் அரிஸ்தாதிலின் மறுப்பு, ஆங்கிலத்தின் மொழிபெயர்த்தவர் குறிப்புரையில் எழுதியவாறு கூறப்படும். T. R.) இன்பத்திற்கும் துன்பத்திற்கும் விரோதம் நொதுமல்நிலையாயினும் ஆகுக. இன்பமும் துன்பமும் தீமையாயின நொதுமல்நிலை நன்மையாகும். இருபொருள் விரோதமாயின் ஒன்று நல்லதாயின் மற்றது தீயது என்பது தருக்கநூல்முடிபு. நொதுமல்நிலையிலிருப்பது இம்மையில் இயலாததாகையால், அது கூடாதது. ஆகைபால் இன்பம் நல்லது.]

இனிச் சிலஇன்பம் தீமையெனை ஒத்துக்கொள்ளினும், இன்பம் மகாநன்மையாதல்கூடும். சந்தோஷம மகாநன்மை. விலங்கினமும் மனிதரும் இன்பத்தைவேண்டிநிற்பதால், இன்பம் நன்மை என்பதை ஒருகுறிப்பாகக்கொள்ளலாம். "பலர் ஒத்துக்கொள்ளும் பழமொழி பிழையாகாது" என ஒரு முதுமொழி உண்டு. பலவகைச் சிவசெந்துக்களுக்கும் பொதுவாகையால் ஐம்புலவின்பமே இன்பம் என்பர். ஐம்புலவின்பம்மாத்திரம்நுகர்ந்தோர் மற்றும் பேரின்பங்களை அறியார். இன்பவாழ்க்கையைத் துன்பமில்லாததெனக்கூறுவதிலும் இனியதென்பதே முறை. இன்பவாழ்க்கை ஒரு இன்பம் என்பதைப் பலர் சிந்தியார்.

## 14-ம் அதிகாரம். தூயவின்பம்.

தூர்த்தர்விழையும் ஐம்புலவின்பம் தீயொழுக்கமாயினும், வேறு மேன்மையான இன்பங்கள் உண்டு. ஐம்புலவின்பத்தில் மிகுதியுண்டு. இம்மிகுதியை விழைதல் குற்றம். ஐம்புலவின்பமாகிய சிற்றின்பம் ஏனைய வின்பங்களிலும் ஏன் விழைப்படுவன என்பதை ஆராய்வோம். துன்பநீக்கத்திற்கு இவ் ஐம்புலவின்பம் மாற்றுமருந்துபோல மிகவும் பயன்படுகிறது. மற்றும் இன்பத்திலும் ஐம்புலவின்பம் மெய்ப்பாட்டுடன் சம்பந்தமுடையது. இன்புறாமல் நொதுமலாயிருத்தல் முடியாதாகலான், பேரின்பங்களை அனுபவித்தறியாதார் இச்சிற்றின்பமாகிய ஐம்புலவின்பத்தில் இன்புறுவர். இன்பத்திற சில இயற்கையாய்த் தீமை; சில பழக்கத்தால் தீமை; சில தற்செயலாய்த் தீமை. இவ்வாறு இன்பம் மூவகைத்தீமையாவதும் உண்டு.

முகத்தல் பார்த்தல் கேட்டல் முதலிய தொழில்களெல்லாம் விலங்கினத்திற்குத் துன்பங்களாய்த்தோன்றும் என்பர் விலங்குநூல்வல்லுநர். புலன்களைத் தொழிற்படுத்திப் பழகியதால் மக்கட்கு அது துன்பமாய்த் தோன்றாது. இளமை வளருந்தன்மையாகலால் ஒரு மயக்கம். மயக்கம் இன்பமாய்த்தோற்றும். சோகம் என்னும் மெய்ப்பாட்டில் அழுந்தியவர் துயரத்தை நீக்குவதற்காக யாண்டும் இன்பத்தை நாடுவர். இது போன்ற ஆசையைத்தீர்க்கும் இன்பம் சிற்றின்பம். மனதை எழுச்சி செய்யும் இயற்கையான, இன்பமே உண்மையான இன்பம். மனிதவியற்கை ஒரே குணமன்றிப் பலதன்மைத்தாகலான், ஒரே இன்பத்தில் நீடித்தகாலம் ஒருவராலும் இன்புறவியலாது. தேவர்கள் ஒரேதன்மைக் குணமுடையராதலின், ஒரே இன்பத்தில் இன்புறுவர். பலகுணங்களால் துடிக்குறும் மானிடர்க்கு எவற்றினும் இனியது ஒரு இன்ப நிலையிலிருந்து வேறோர்இன்பநிலைக்கு மாறுதலே.

[சுகவீனத்தில் மருந்துண்கிறோம். மருந்து ஒரு தேவை; ஆகையால் நன்மை. அங்ஙனமன்று. மருந்து நன்மையன்று; மருந்தைச் சீரணிக்குஞ்சக்தியே நன்று. இவ்வாறு மனத்தை எழுச்சிசெய்யும் ஆசையேனும் தேவையேனும் இல்லாமல் மனத்திற்கு முயற்சியுண்டென்பது தவறு. இக்கொள்கை தற்கால மனநூலாரது.] என்பது உரை.

## எட்டாம்பாகம்: கேண்மையென்னும் அன்பு.

### 1-ம் அதிகாரம். அன்பைப்பற்றிய அபிப்பிராயங்கள்.

கேண்மை ஒருநல்லொழுக்கம்போல்வதாகலானும் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகலானும் ஈண்டு ஆராயப்படும். அடக்கமுடைமையின்பின் கேண்மையின்வரலாறு தொடர்வது முறை. எல்லாச் சௌக்கியங்களும் உண்டாயினும் நட்பில்லாச்சீவியம் விரும்பப்படுவதன்று. பொருட்செல்வம் அதிகாரம் முதலியன உடையோர்க்கு நட்பு அவசியம் வேண்டும். அன்பிலார்க்குச் செல்வத்தால் ஆய பயனென்ன? வறுமையினும் மற்றும் இடையூறுகளினும் சினேகிதரிடத்தேபோய் ஒதுங்குவோம். இளமைப்பருவத்தில் நாம் நல்வழிப்படுவதற்குச் சினேகிதம் வேண்டப்படும். விருத்தப்பருவத்தில் எமதுநோக்கங்களை நிறைவேற்றுதற்கும் சினேகிதரது உதவி வேண்டப்படும். வாலிபப்பருவத்தில் மேன்மையானசெயல்களைச் செய்வதற்கும் பிறருதவி வேண்டப்படும். இளைஞரைநல்வழிப்படுத்துவது நட்டாரின் வாயுறைமொழிகள். "இருவர் சேர்ந்து சிந்தித்தல் எததொழிலினும் யாண்டும் பயனுடைத்து" என மொழிந்தார் ஹோமர். பெற்றோர் பிள்ளைகளை நேசிப்பதும் பிள்ளைகள் பெற்றோரை நேசிப்பதும் இயற்கை. மிருகங்களுள்ளும் பறவைகளுள்

ளும் இவ் வன்பு உண்டு. மக்களும் மக்கள்முன்னிலையில் மகிழ்தலைக் காண்போம். இராச்சியங்களும் தம்முள் நட்பை அவாவிநிற்பன. நட்பு உண்டாயின் அதன் பயனாக நீதிசெலுத்துவது இலகுவாகும். பிரமாணங்கள் அவசியமின்றாகும்.

நட்பு மேன்மை என்றும் அழகு என்றும் அறையப்படும். பல சினேகிதருடையாரைப் புகழ்வது உலகவழக்கம். சிலர் யாவன் நல்லவனோ அவன் சினேகிதன் என்பர். நட்பென்பது ஒருபொதுத்தன்மை என்றும் இனமென்றும் சொல்லப்படும். ஒரேவகை முயற்சியுடையோர் ஒருவரை ஒருவர் நேசியார் என்பர் சிலர். யூறிப்பிடிஸ் என்னும் நாடக ஆசிரியர், "பூமி மழைவேண்டிநிற்கும்; வான் பூமிநோக்கிவிழும்" என உரைத்தனர். உலகப்பொருள்கள் தோற்றநாசமுடைய வென்பதை விளக்கிய கெருக்கிளீற்றஸ் என்பவர், "முரணியதன்மையுடையன ஒன்றினை ஒன்று பற்றி நிற்கு" மென்பர். இனித் தத்துவஞானியாகிய எம்படோக்கிள்ஸ், "இனம் இனத்தைத் தேடும்" என்றார். இவ்வுரைகள் ஒன்றுடன் ஒன்று முரணுவதை நோக்குக.

## 2-ம் அதிகாரம். பலவகை நட்பு.

நாம் எவ்வகைப்பொருளை விரும்புகிறோம்? விரும்பப்படுவது நன்மையானதும், இன்பம் விளைக்கத்தக்கதும், பிரயோசனப்படுவது மென மூவகைப்படும். பிரயோசனப்படுவது நன்மையானதும் இன்பமானதும். மக்கள் நன்மையைவிரும்பாது தம்நயத்தையே விரும்புகின்றனர். அஃறிணைப்பொருளாகிய சடப்பொருள்களில் ஆசை வைத்து விழைவது நட்பன்று. திராட்சைரசம் நல்லது என்பதன் கருத்து திராட்சைரசம் ஒருவனுக்கு நல்லதென்பதே. திராட்சைரசம் அசித்தாகிய சடமாதலால் தான் மக்களால் விழையப்படும்பொருளெனச் சிந்திக்கமாட்டாது. இவ்வாறின்றிச் சித்தாகிய மனிதர் இருவர் கேளிராகி அன்பினியைந்து ஒழுகுதல் நட்பெனப்படும்.

## 3-ம் அதிகாரம். தூயநட்பு.

யாவர்க்கும் நன்மையான நன்மையும், ஒருவரது நன்மையும், ஒருவனுக்கு நன்மைபோலத்தோன்றும் நன்மையும் என ஒருவன் செயலுக்கு மூவகை நிமித்தங்களுள. இம் மூன்றுநிமித்தங்களுள் ஒன்றும் பலவும் மக்களை நோக்கத்திற்கேனும் முயற்சிக்கேனும் தூண்டும். நட்பின் நிமித்தங்களும் இம்மூன்றுமே. ஒருவரின் நிமித்தத்தை மற்றவர் அறிந்தபின்னர்த்தான் இ—வர் ந—டாவர். சிநேகிதர் ஒருவரிடம்

ஒருவர் அன்புபாராட்டுவதற்கு இருவரின் நிமித்தமும் ஒன்றுயிருத்தல் அவசியம். பிரயோசனம் கருதி ஒருவன் வேறொருவனை நேசிப்பானு யின் நேசிக்கப்பட்டவன் நேசிப்பவனை நேசியான். இவ் விருவருக்கும் ஒரு இன்பம் பொதுவாயின் ஒருவரை ஒருவர் நேசிப்பர்.

தூயனோ தீயனோ என்று ஆராயாமல் நட்புக்கொள்வது உலக வழக்கம். இந் நட்பின் காரணம் நட்பாகும் நேரத்து இன்பம். இவ் வின்பம் கெடக் கேண்மை பகையாய் மாறுதலடையும். வயோதிகர் பிரயோசனம் நோக்கி நட்புக்கொண்டாடுவர். ஒருவரிடம் ஒருவர்க்கு உவப்பில்லாமையால் இரு வயோதிகர் ஓரில்லத்தில் வசியார். விருந் தளிப்பார்க்கும் விருந்தினர்க்கும் உள்ள கேண்மையும் பயன் நிமித்தமாக உண்டாயது. இன்பத்தில் பற்றுடையாராகலின், வாலிபர் இன்பம் நிமித்தமாகக் கேளிராவர். வயசு ஏறஏற இன்பமும் மாறுதலடையும். வாலிபர் விரைவில் நட்டாராவதும், விரைவில் அந்நட்புக் கெட்டுப் பகைவராவதுமுண்டு. வாலிபர் காதல்கொள்வதும் இயற்கை. தலைவியைத் தலைவன் காதலிப்பதும் இன்பங்கருதியே. காதலுக்குக் காரணம் விரைவில் எழும் ஒரு ஆசை. ஒருநாளிலே பலமுறைகாதலித்தலும், பலமுறை காதலை வெறுத்து ஊடுதலும் யௌவனப்பருவத்தின் தன்மை. இத்தன்மையரான காதலியும் காதலனும் ஒரு வீட்டிலே வசிக்கவிரும்புவர். ஒருவரது நல்லொழுக்கத்தை மற்றொருவர் காமுற்று இருவரும் அறத்தின்வழி ஒழுகி, நட்பின் பயன் அனுபவிப்பதே தூய சினேகிதமெனப்படும். ஒருவன் தன் நண்பனது நன்மையை எப்போதும் நிமித்தமின்றிக் கருதுவனாயின், அவனே தூயசினேகிதன். இத்தன்மைத்தாகிய நட்பே நட்பு. இவ்வன்பே பிரயோசனமானதும் இனியதும் நன்மையானதும் நித்தமானதுமாம். உலகில் உண்மையான சினேகம் அரிது; ஏனெனில் சினேகம் உண்டாவதற்கு நல்லோர் இருவர் நீடித்த காலம் பழகினவராயும், அடிக்கடி சந்திப்பவராயும் இருத்தல்வேண்டும்; அன்றியும் ஒருவர் ஒருவரின் நற்குணத்தைப் பாராட்டவேண்டும். இருவர் நட்பாவதற்குமுன் ஆராய்ச்சியின்றி ஒருவகை ஆசை தோன்றும். இவ்வாசையை நட்பெனச் சிலர் மயங்குவர்.

[தொடரும்.]

த. இராமநாதபிள்ளை B.A.

549 மூங்கில்சந் தனமே கஞ்ச முதிர்கருங் காலி செம்மை
யாங்கருங் காலி யென்னு மைந்தினு ளளவிற் கொண்ட
பாங்குடைக் குழல்வாய் வைத்துப் பரிசித்த துளைக ளெட்டி
னீங்குமுத் திரையோன் றல்லா நிகழ்த்துமத் துளைக ளேழில்.

550 வலதுகை விரல்க ணான்கும் வாமக்கை விரல்கண் மூன்றுந்
தலமுறப் பதிந்து நீங்கச் சரிகம பதனி யென்றே
நிலவுசொல் லெழுத்தோ ரேழை நிறுத்தமாத் திரைப்ப டுத்தா
வுலகுறு நிடாத மீறு யுணர்த்திய விசைக ளேழால். (சச)

551 ஆனிரை மேய்த்த கண்ண னன்றுவாய் வைத்த செவ்விக்
கானமர் கழையி னோசை கல்லையுங் குழைத்திட் டாற்போற்
பானலுண் கண்ணார் மைந்தர் பஞ்சமா சத்தம் வல்லார்
நானிலத் துருகிக் கேட்ப நாதமே விளைப்ப ரோர்பால். (சரு)

### வேறு.

552 யாக்கைதொண் ணூற்று றங்குலி யவற்று
ளிருவயி னுற்பதேழ் பாதி
நீக்கிமூ லாதா ரமதென நடுவு
நின்றதோ ரங்குலி யதுதான்
மீக்கொணூல் விரலா தாரமே வசவை
[1]மெய்யதாய் முயற்சியா லுதானன்
றுக்கவே யிடைபிங் கலைதழீஇ யறைந்த
தானமோ ரெட்டையு மடைந்தே. (சசு)

553 எடுத்தலா தியவாங் கிரிகையோ ரெட்டி
னிசையெனப் பாவுட னிசைத்துப்
படுத்திய நெறியாற் பண்ணலுற் றதனாற்
பண்ணெனு நூறுபத் தொன்றைத்
தொடுத்தன ராகி வண்ணமூன் றுறவே
தோமுறு கோழையீ ருக
விடுத்ததிங் குருமை மிடற்றினுற் பாடல்
விஞ்சைய ரையுங்குழைத் திடுமே. (சஎ)

[ஸ்ரீ-ம்.] [1]மெய்யதா. சா.

554 தண்ணுமை யுடுக்கை பேரிகை படகஞ்
சல்லிகை காடிகை யிடக்கை
யெண்ணுமத் தளமா தியவிசைத் தளமென்
றிசைத்திடுந் தோற்கரு விகளைப்
பண்ணமைப் பவர்தா நால்வகை யாழும்
பயில்பவ ருடன்கலந் திசைதேர்
நுண்ணறி வுடையோர் செவிப்புலங் குழைவா
னுண்ணிதி னெழுப்பிசை யொருபால். (சஅ)

555 குணங்களாற் பிறந்த விருதிறத் தனவாங்
கூத்தினுட் சொக்கமா தியவாய்ப்
புணர்ந்தநான் கெனலாஞ் சாந்திபி னுடனே
பொதியில்வாழ் குறுமுனி யுணர்வா
னுணர்ந்துணர்ந் துரைத்த குரவையா தியவா
மோங்குமோ ராறையு முறைப்பா
யிணங்கிய விநோத மென்பவற் றினுக்கு
மிணங்கிய விலக்கண மெனலாம். (சகூ)

556 சமநிலை முதலா மறுவகை நிலையுஞ்
சாற்றிய குஞ்சித மீரு
முமர்நெறி யினவா மைவகைப் பதமு
மழகிய சரிகையே முதலாய்
நமதறி வுணர்வா னங்கமீ ரெட்டாய்
நவின்றவும் வர்த்தனை யெனவே
யிமமுறு மிறைக்கை பயந்தன வாமா
லெட்டிதன் முதலவோர் நான்கும். (ருo)

557 கல்விசேர் சதுரச் செழுமுட விருத்தக்
கைகளோ யாறின்மெய் புணர்ந்தும்
பல்வகைக் கூத்தைப் பொருண்முத லீரேழ்
பயில்விலக் குறுப்புறப் புணர்த்து

மல்லிய முதலா மொருபதி னென்றே
டாடல்பாட் டியங்கள்கற் றூட
லெல்லையில் பாடல் பாணிதூக் கடைவே
யேகமாம் படிநிகழ் காலே. (ருக)

558 வனப்புடைப் பதாகை யாதியாய்க் காமர்
வலம்புரி யிறுதியா யொற்றை
யெனத்திரட் டியவை யாறின்மேன் மூன்று
மிணைத்திடு மிணைக்கையா மெனவே
கனத்தவஞ் சலியே யாதியா முகுளக்
கையுடன் கபோதகக் கையுந்
தனக்கமை வருத்த மானமீ ரூகச்
சாற்றுமைம் மூன்றேடெண் ணூறும். (ருஉ)

559 சோர்விலாப் பிண்டி பிணையலே யெழிற்கை
தொழிற்கைபாப் பொருட்கையோ டைந்தில்
வாரமா மதனுட் பிண்டியும் புகாது
வாரமும் பிண்டியுட் புகாதே
யோர்திக ழாட லிடத்தவி நயமு
மேனைய புறத்தினு மெய்தா
நீர்மையுங் குரவை வரியொடு விரவா
நீர்மைசா லாடலா சானும். (ருங)

560 நால்வகை யாழி னமைதியு முயர்ந்த
நன்னிலத் தகலமோ டோங்கிக்
காலொரு நான்குந் தலைமயங் காத
காட்சியி னிளமைமுப் புறுத
பால்புணர் மரத்தைப் புருடனு யுவினிற்
பயிலவே குறைத்தொராண் டேலரு
மேலதிற் கொண்ட வயங்கித் தடனே
மிகுந்தசி ரவற்றமை திகளும். (ருச)

561 சங்கமுங் குயிலு மயிலும்வா ரணமுஞ்
சதிபயில் புரவியு மனமு
மிங்கிதம் பெறுகா டையும்வனப் புடைத்தா
யெழுப்புமோ சைகணிக ரெனவே
மங்கலம் பயிலு முழைவிள ரியிளி
வான்குரல் வசையிலாத் துத்தம்
பொங்குகைக் கிளையே தாரமா மெனப்பேர்
புனைந்துள மாண்பவற் றினெடும். (ருரு)

562 தலையினி னெஞ்சின் மிடற்றினி லுலவுந்
தாலுவி லண்ணமா மதனி
னுலைவிலா மூக்கிற் பிறப்பதாய் ஆ ஈ
ஊவொடே காரம் ஐ ஓ ஔ
நிலைகொளக் காத்தே ழிசைகண்மந் தாமத்
திமமுட னீடுதா ரகமாய்க்
கலைபயில் பவர்தாந் துறையிரண் டெனவே
காட்டிய மிடற்றிசை யோடும். (ருசு)

563 இருந்தையுன் மத்த மிலையுட னயினி
யிசைந்தவெண் சாம்பலென் பவற்றாற்
பொருந்துமூ வகைத்தா மாச்சினை யமைத்த
பொற்புடைத் தாகிய வலக்கண்
டிருந்திய குரலென் பதனையு மிடக்கண்
சேமமே விளியையுந் தெளியத்
தருந்தகு தியவாம் யாழ்முழா வெனலாய்த்
தண்டமிழ்ப் புலவர்தா மமைத்த. (ருஎ)

564 மத்தள மிடக்கை சல்லிய முடுக்கை
வான்கா டிகைபட கமெனு
முத்தமக் கருவி மத்திம மாந்தண்
ணுமைமுத லகமகப் புறத்தை

முத்திறத் தினவா மங்கம முறவே
முதன்மைசால் வரிக்குமா டற்குஞ்
சித்திரம் பெறத்தே சிகத்துட னமைக்குந்
தெளிவுடைப் பாடலா சானும். (ருஅ)

565 அகத்தியன் சச்ச புடமெனுந் தாள
மாதியா யடக்குறூற் றெட்டின்
மிகத்தெளிந் தேக தாளமா தியவாய்
மேதகு புறத்தினுக் குரிமை
நிகழ்த்திய நாற்பா னென்றுட னகத்தி
னிலையெனப் பத்தின்மே லொன்று
யிகப்பிலா வெண்கூப் பாணியீ றாக
விசைப்பவை விகற்பமுந் தெளிந்தே. (ருசு)

566 கொட்டட னசைதூக் களபென நான்காய்க்
குறிக்கொண்மாத் திரைப்பெயர் விதிக்கப்
பட்டதா ளத்தின் வழிவரு வனவாய்ப்
பயின்றசெந் தூக்குடன் மதலை
நட்புடைத் துணிவு கோயிலே நிவப்பு
நானிலம் புகழ்கழா அ னெடுந்தூக்
கிட்டபே ருடன்சி ரொன்றுடே டிமுவா
யிசைத்தவே ழையுந்தெளிந் தோனும். (சுo)

567 வடமலை யுடன்றென் குமரிகீழ் மேல்பால்
மரீஇயதெண் கடல்சுலாம் வைப்பிற்
குடமுனி பயந்த விருவகைத் தமிழாய்க்
குழீஇயவீ ரைந்திலக் கணமுந்
திடமுறத் தெளிந்த நாற்கவிப் புலமை
சிறந்தெழுத் தாதியைந் திணையு
நடமுத லைந்தும் விரித்திலக் கணஞ்செய்
நாவலந் தீவினு வலரும். (சுக)

568 என்றிவர் முதலோ டிடைகடை நிகழ்வ
தெண்ணியே யிரும்பொடு கருங்க
லொன்றிய மனத்தொ டிருப்பவுங் குழைவா
னூற்றதண் டியமதை யாண்டு
சென்றிடப் பிடித்தே ழாண்டள வியற்றித்
திருநடம் பாடலோ டழகு
மன்றவே நிறைந்த வாண்டுபன் னிரண்டின்
மணிவிர லாறுநா னமைந்த. (௬௨)

569 ஏழுகோ லகல நீளமெண் கோலா
மெழில்பெறு முயர்பொரு கோலாய்
வாழுமா றமைத்து வாயிலோ ரிரண்டாம்
வனப்புடை யரங்கினிற் சிலம்பு
சூழுநல் வலத்தாண் முந்தியே வலது
தூணுறத் தோரிய மடந்தை
யாழுடைக் கரத்தி னிடது தூண் சேர
விசைத்திறக் குயிலுவ ருடனே. (௬௩)

570 ஊனுடை யிருதூண் பொருமுக வெழினி
யோரிடத் தொருமுக வெழினி
[1]வானுடைக் கரந்து வரலெழி னியுடன்
மாண்புடைக் கணிகையர் வழுவா
[2]தானெடு திருமான் மதனரு முகவ
னமர்புரி மகளயி ராணி
சாதமே யுறமுன் பாடிய தெனநூல்
சாற்றிய கூறுபா டுடைத்தாம். (௬௪)

571 தாண்டவ நிருத்த நாட்டியங் குரவை
சால்புடை வரியொடு கோல
மீண்டிய பதினோ ராடலென் பனவா
யெழுவகைத் தாகிய கூத்தைக்

[பி-ம்.] [1]வானிடைக். [2]தானெடுங். ச.

காண்டொறும் பாடல் செவியுறுந் தொறுங்கண்
கருத்தொடுங் களிதரக் காங்கால்
பூண்டவி ரயமுர் தாளமு மியமும்
புணர்தா நடிப்பாங் கொருபால். (௬௫)

இவை பதினேழூர் தொடர்.

572 தெத்தவெண் டிரைப்பாற் கடலமு தளித்த
திருமகள் கொழுநனைப் புவனம்
பூத்தமுண் டகப்பொற் பொகுட்டினு ளுதித்த
பூமக னெடுஞ்சுவ லோகங்
காத்தவிந் திரன்வா னவருடன் குழுமிக்
கற்பக நறுமலர் கைக்கொண்
டேத்துமவ் வொலிமுர் றுறமொழிந் தனவா
மெவ்வொலி யினுமிகுந் தெழுமே. (௬௬)

573 மாமணி மகுடங் கொண்டைபொற் பட்ட
மகாகுண் டலஞ்சிரோ மாலை
காமர்கே யூரந் தோள்வளை முன்கைக்
கடகம்வச் சிரக்கணை யாழி
தாமவெண் டாள மணிவடந் தகட்டுத்
தமனிய நவமணிப் பதக்க
மேமமா னுதா பெர்தன மரைநா
ணிருங்கழல் சிலம்பொடெண் ணரிதாம். (௬௭)

574 னைம்பொனு பாண நிதியறை கொழும்பொற்
பரிகல வகைதிருப் படிக்கங்
குும்பமா தியகொப் பரைதிரு விளக்குக்
கோடிபல் கோடிகூர்ந் துளவா
மும்பரா [3]ரமிர்த மகத்தொரா வரண
மொரிரண் டாகியொன் றுவற்று
ளிம்பரா ரமிர்த மெனவிளங் கியதால்
யாவரே யதன்வளம் பகர்வார். (௬௮)

---

[பி-ம்.] [3]மமிர்த.

575 கட்செவித் துளைப்பற் கறைமிடற் றனந்தன்
கணபண மகுடமா யிரமு
மட்புலத் துளகற் பகஞ்சினை களென
வாழ்த்துவான் வடிவமா றினனு
விட்புலத் தமரர் வழுத்துபா மாறன்
விரும்புகா வணமதா யுதித்த
புட்குலத் [1]தொழுதி யொழிவறு துறங்காப்
புகழ்த்திருப் புளிவளம் புகல்கேன். (சுகூ)

576 வரம்பிலா வுயிர்கட் குயிர்களா யவற்றை
வரம்பிலா வடிவுளாக் கியபின்
புரந்தவான் பொருளாந் தனிமுதற் பிரமம்
போற்றுவார் போற்றுபல் பொருளாய்ப்
பரந்தபே ரண்டம் பரந்தபல் லுலகம்
பரந்தபல் பிண்டமா னவைபோற்
சுரந்தபல் பணைத்தாய்ப் பணைதொறும் பணைத்தாய்த்
துவன்றபூ வொடும்பல னுடைத்தே. (எ0)

577 தாவில்பே ருணர்வாற் புணர்த்த[2]பே ரண்டந்
தனதகத் தொடுக்குபே ருருவிற்
காவல்பூண் டொழுகு மொருபெருங் கடவுள்
கலுழன்மே லொன்பதா [3]றிரண்டு
தேவராய் மிருந்து பாடல்கேட் டிருப்பச்
சினைதொறும் பொறுத்ததிண் ணிமையா
லாவதே மேரு வெனப்பணைத் ததற்கு
மதனதா முரனுடைப் பொறையே. (எக)

578 *பிலம்புகுந் திரேழ் புவனமூன் றரித்த
பெருந்தகை யெம்பிரான் றனைவெண்
சலஞ்சலந் திகிரி யெனப்[4]புரந் தவர்கள்
சந்த்ரசூ ரியரெனச் சயிலம்

---

[பி-ம்.] [1]தொகுதி. சா. [2]பல் லண்டர், சா. [3]திரண்டார். சா. [4]புரப் பவர்கள், மா.

வலம்பயின் றனாரந் தாத்தவர் வருந்தா
வகைதரித் திலமெனத் தரிப்பா
னிலம்புகுந் துயர்பூஞ் சினையொடுந் தருவாய்
[1]நிரந்தாந் தரிக்கும்வாழ் வினதே. (எஉ)

579 கோங்குலா முகுள முலைத்திரு மகள்கோன்
கோளரா மறைதரு வடிவா
யோங்குபூ தலத்து ளாம்பிர மமென
வுதித்தது முண்மைபாம் பிரமன்
பாங்குடைக் கலைதோய் கொம்புறத் தலமும்
படைத்துநா மும்பழிப் பிலவாய்த்
தேங்குலாய் நாலு மலர்முகத் தெகின்மெய்த்
தேவனு னதுந்தெரித் திடினே. (எங)

580 யாவரு மொருமை யுறுது திக் கையொடு
மிருமைவெண் பிறைகொள்கொம் பாதாய்
மாவரும் பாகர் தமைப்பொறுத் துளதாய்
மதிபயின் மும்மைநற் றூன
மாவதாந் தன்மை யுடைமையா னன்மை
யறந்தெரி நானிலத் தவருந்
தேவருங் கடவுட் சிந்துர மெனவே
சிறப்புற வுரைப்பதுந் திடனே. (எச)

581 விருத்தமா நிரப்பு வளைத்தெழும் பசித்தீ
வெதுப்பியே யெழுப்பவெஞ் சாம்புக்
குருத்தளர்ந் தயனுட் டவருறு மளவி
லுவந்தெதிர் நோக்கியின் னமிர்தாய்ந்
தருந்துவார் கொடையுற் றுழிநீர் வைப்பி
னமரர்பொன் னுலகில்வாழ் கடவுட்
டருப்பழு மாமாந் திருப்புளி யெனலாய்த்
தண்ணளி புரப்பதொன் றதுவே. (எரு)

---

[பி-ம்.] [1]நிலமரீஇ யினதென லாமே, மா.

582 மாரிசால் கரட மதமலே யழைப்ப
வந்தகார் கடல்கடைந் தளித்த
பாரிசா தமுமை வருக்கமென் றூலும்
படைப்பினீங் கிதற்கிணை வருமே
கூரியார் தன்னை யடைந்தருள் கெனுமுன்
குறித்தவர் குறித்ததுய்ப் பதொடும்
வேரியார் கமலத் திருமகள் கொழுநன்
விழைந்தபே ரமுதமுந் தருமால். (எசு)

583 ஏசுவா ரேசும் படிக்கிடர்க் கடற்புக்
கெவ்வமெய் துவர்கள்வா கடநூல்
பேசுவார் தமைப்பின் றொடர்ந்துபின் றொடர்ந்தும்
பிணி[1]யொழிந் திடுசுக மறியார்
வீசுவார் சினையின் றவனியை நிழற்றும்
வேர்முதற் றிருமணும் புனலும்
பூசுவார் பிணியும் பருகுவார் பிணியும்
புறக்கொடை தருவதுந் தெளிந்தே. (எஎ)

584 நறுமலர் பசுங்காய் தீங்கனி திசைக
ணுன்குறு கொம்பரெஞ் ஞான்றும்
பெறுதகை யுடைத்தா யவற்றுளொன் றுதிர்ப்பப்
பெற்றதை வாய்க்கொளு மவர்நோ
யறுசுவை யுடைத்தா யமிர்தமே யளிப்ப
தாகவும் புளிப்பெனுங் குணமே
யுறுசுவை யுடைத்தென் றுரைப்பதென் னமிர்த
மொருதரு வடிவெடுத் ததையே. (எஅ)

585 புனிதர்முற் பிறப்பிற் பலபல திறத்தாற்
புணர்த்தபுன் னியங்களிப் பிறப்பிற்
றனிதனி புரப்ப மனைவியர் புதல்வர்
தந்தையர் நலங்கொண்மூத் தமிழ்வாழ்

[பி-ம்.] [1]யொழித் திடுசுக, சா.

வினிதினெய் தியபோற் றளிர்த்தமாண் கொம்ப
ரேமகன் மலர்மண நறவந்
தொனிசெயே ழிசைவண் டினமன முதற்புட்
டொழுதிமா மயினடம் பயிலும். (எசு)

586 புண்டரீ கனுக்கென் றமைந்தநாட் சமைந்த
பொழுதினி லெழுந்தபே ருதகத்
தண்டர்நா யகன்மேல் லணையதாய்ச் சிங்கா
சனமதாய்க் கவிகையாய் விளக்காய்ப்
பண்டைநா ளநுசன் றம்முனென் பவராய்ப்
பரமதே சிகன்றிரு நிழலாய்க்
கொண்டகா ரணன்றன் பெருமையை யெவரே
குணித்துரைத் திடுந்தலை மையரே. (அ0)

587 வங்கவெண் டிரைப்பாற் கடற்குண திசையின்
மரீஇயவா முலோகமால் வரைமேற்
பொங்குசெங் கதிரோ னொருதனித் திகிரி
பூண்டதேர்ப் புரவியோ ரேழுந்
தங்கியெப் பாறுந் தடஞ்சினை மிடைந்த
சண்பகப் பொதும்பரின் விராய
தெங்கின்முப் புடைப்பொற் குடக்கனி வீழத்
திசைதொறும் வீழ்வமுக் கனியே. (அக)

வேறு.

588 பொதிய மால்வரைச் சந்தனப் பொழில்வட பொருப்பின்
முதிய காழகிற் சோலைச்செம் முழுமணி முதலா
நிதியம் யாவையு நிரந்தரங் கணமுநீப் பின்றுய்ப்
பதிய தாய்வளம் புரப்பதொன் றென்பரப் பதியே. (அஉ)

589 அடர்ந்த புன்னைபொற் கொன்றைசண் பகப்பணை யவற்றிற்
படர்ந்த முல்லைமென் முகையவிழ்ந் தலர்பல பரப்பு
மிடங்கொ ணள்ளிடை யோதிம மிருக்கையோங் கெழில்வான்
றடங்கொ டாரகை வளைத்தவெண் மதியெனத் தயங்கும். (அங)

590 புன்னை வண்சினை யடர்செய்தண் டழையின்மேற் பொங்கர்
நன்னர் மென்மலர் சொரிதரத் துவன்றதா னுரு
மின்ன லின்றியே குடம்பைசெய் தியற்றுமெல் லணையென்
றன்ன மென்பெடை யொடுதுயில் வைகும்வை கலுமே. (அச)

591 இம்பர் நாவலர் தம்பிரா னுலாவர விமையோ
ரும்பர் பொன்மலர் காங்களாற் சொரிபொழு தோங்கும்
கொம்பர் பூமலர் பொழிதரக் குழீஇயதைக் கொழித்தே
யம்ப ரத்தினிற் செலவிடுங் கவரிநின் றசைகால். (அரு)

592 களிகொ ளுன்சுரும் பறைபொழிற் கவடுழக் கலைதோய்ந்
தொளிகொள் வெண்மதி யகடுகீண் டுக்கதெள் ளமிர்தத்
துளிக ளைப்பொசித் தோதிமம் பானையே துதிக்கு
மளிய யோகரி னருந்தவம் பயில்வசந் ததமே. (அசு)

593 தடங்கொ ணீலமுங் கமலமுங் கொணர்ந்தனர் தண்காக்
குடம்பை செய்குபு தவறிவீழ் வாழைமென் குருத்தி
னிடங்க ளேனைய வீழ்தலு மளவளா யேம
நடங்கொண் மன்மதன் றாணிபோற் றோன்றுவ நாளும். (அஎ)

594 சுறவு லாங்கடற் றண்டவெண் பிறைதவழ் சோலை
நறவ நாகிளங் கதலிமென் [1]குருந்துற நறவைச்
சிறகர் மென்கிளிக் குலத்தொடுஞ் செம்பொன்செய் மாடப்
புறவ மாந்துபு பூவையு மருந்துமெப் புலத்தும். (அஅ)

வேறு.

595 அளிக்குலா முரல்சந் தனத்தகன் பணைக
ளரணவாய்ப் படர்ந்ததண் டளவம்
பளிக்குமண் டபமேற் றளத்தினிற் சொரிந்த
பனிமல ரினைத்திசைப் பவனம்
வெளிக்குமப் புறஞ்செல் பொன்மதிட் பாங்கர்
விளங்குவான் புழைதொறும் விசிறத்
துளிக்கும்வெண் டிரைப்பாற் கடன்மடை திறப்பத்
துவன்றபாற் றவலைபோற் றோன்றும். (அசு)

---

[பி-ம்.] [1]குருத்துற. சா.

596 மைக்கடல் பருகி யெழுந்தவான் கமஞ்சூன்
மழைதவழ் மாமரப் பணையாங்
குக்கதிம் பழத்தி னறுசுவைப் பான
மும்பர்நின் [1]றம்பர்வீழ் வதற்குத்
திக்கிலா மையினல் வெண்பொன்மா மதிண்மேற்
செம்பொன்மாண் புழைதொறும் வழிதே
னெய்க்கடற் கும்பர் மடைதிறந் [2]திடாநெய்
நியதியும் வழிதல்போற் சிறப்ப. (௬௰)

597 வான்கடல் வளைத்த புவனமா மகட்கு
வாணுதற் றிலகமென் றுலகந்
தான்புகழ் கோட்டத் தவிழ்ந்தகோம் பரிற்பூத்
தளித்ததண் ணறுவவண் பெருகி
ஞான்கதிர் வலஞ்செய் கன்மதிட் புழைக்க
ணுழைந்துநாற் றிசையினும் வழிவ
தேன்கட லதன்மேன் மடைதிறந் தனபோற்
றினசரி தையும்வளந் தருமே. (௬௧)

வேறு.

598 மல்லிகையுஞ் சண்பகமும் வகுளமுந்தண்
ணறுந்துளவு மாயோன் வாழ்வைச்
சொல்லியசெந் தமிழ்மாறன் றிருமேனி
வாசமுடன் சூழ்ந்தொன் றாக
மெல்லியநன் பனிநீருஞ் சந்தனமு
மான்மதமும் விரவி நாளு
மெல்லியுமொண் பகலுமிரு நாற்றிசையும்
பரிமளிக்கு மியற்கைத் தாமே. (௬௨)

599 ஆரமே திகழ்பொருநைச் சங்கணிதண்
டுறைப்புனலை யந்த ணாளர்
வாரமே தகப்பசும்பொற் குடத்தினிற்பூ
ரிப்பமகிழ் மாற ராடு

[பி-ம்.] [1]றிம்பர். சா. [2]றிடநெய். சா.

மீரவா டையின்வசந்த மதனேமுகர்
திளங்தென்ற லினிய காலே
நேருமாங் கவர்படிவத் திறைத்திடுமெப்
பரிமளமு நிறைந்த தாமே. (கூங)

வேறு.

600 [1]பொலன்றுகின் மருங்கிற் கவின்பெற வுடுத்துப்
பொன்முடி புனேந்துதிண் ணியவா
யுலம்பொரு வாகு வலபமுங் குழைமீ
தொளிர்மணி மகாகுண் டலமு
நலம்பெறப் புனேந்து காமர்கத் தூரி
நாமமு மெழுதியே திருக்கைத்
தலந்தனில் வருபோழ் துதாபெர் தனமேற்
றண்ணிலா வெழுப்பிய தகைசால். (கூச)

601 நித்திலத் தாம மருமணித் தாம
நிழலுமிழ் நவமணிப் பதக்கம்
பத்திபத் தியதா யெறிப்பவெண் மதியம்.
பானுவி னுதயமொன் றியதே
யொத்திலங்கி கியதாற் கங்குலும் பகலு
முறுபக [2]லாக்கியத் தானங்
தத்துநீர் விரசைக் கப்புற மாமர்
தாமமா மெனத்தழை தருமே. (கூரு)

வேறு.

602 கடிப்பான துறுபறைபோற் கதறுகூற்
குடிஞைபுறங் காட்டை நீத்து
வடிப்பார்கள் வருத்துணர்ந்த மறைமுதலாம்
யாவையினு மாயோ னுமம்
படிப்பார்கட் கமைத்தபொரு ளுரைமுழுதாய்ந்
தவற்றினெடும் பசும்பொற் சோலைக்
குடிற்பாய விருந்துகுரு கூர்குருகூ
ரெனவுரைக்குங் கொள்கைத் தாமே. (கூகூ)

---

[மூ-ம்.] [1]பொலந்துகின். சா. [2]லாகியத். சா.

603 கலைக்காவல் பயின்றவுரா னுடைப்புனித
ரிதயமெனுங் கமல மீது
நிலைக்காவல் பயின்றுநெடு வெளியடைக்கும்
பழுமரத்தி னின்று பெரு
மிலைக்காவல் பயின்றவனை யுட்காவ
லெனவகத்தே யிருத்தி யெட்டுத்
தலைக்காவல் புரிந்திருநா லுருவெனப்புள்
ளரசிருக்குந் தலைமைத் தாமே. (கூஎ)

604 வேலைக்கே யெழுகதிரும் பனிமதியு
மோட்டொழித்து விண்ணிற் றேவர்
சோலைக்கேய்ந் தெழுமதிளின் புறத்தினரொண்
மரில்வடபாற் றோன்று கீழை
மூலைக்கே யிருந்து துதித் ¹திறைஞ்சுநர்க்கு
வெளியாடி முருகார் குல்லை
மாலைக்கே சவற்பணிதற் கிளையானைக்
கிழவனெனும் வாய்மை நன்றே. (கூஅ)

605 தொல்லைநால் வகையுகமா யிரத்திரட்டி
யொருங்கடைவிற் றொக்கோர் நாளா
மெல்லைநான் முகக்கடவுட் கவையிவனுக்
கொருகணமு மெய்தா தென்றாற்
குல்லைமா லிகைப்புயலை வழுத்தியழி
யாவியல்பு குறிக்கொ ணீதி
முல்லலோங் கிளையானை மதியாது
கிழவனெனும் வைய மன்னே. (கூகூ)

606 வாகடநூ லினைப்படித்துப் பலமருந்து
பறித்திடித்து வடித்து நோயைப்
போகடமாட் டாதுழந்து வயித்தியநா
தரைத்தேடிப் போவார் போக

---

[பி-ம்.] ¹திறைஞ்சினர்க்கு. சா.

நோகடவா ரணமுரைத்த மறைமுதலா
மிறைவனையே நோக்கி யிம்பர்
யோகடைந்த வுயர்பறவைக் கரசேபென்
பிணிக்குமருந் துன்னுங் காலே. (௧௦௦)

607 பொன்னுகர் தனக்கணியா மனுராமன்
றம்பியர்தாம் பொருத போரிற்
பன்னுக பாசமெனப் படிற்றரக்கன்
சேய்துரந்த பதக வாளி
கொன்னுக வுடல்பிணித்த பிணியறுத்த
சிறைப்பவனக் கொற்ற வேந்தற்
கென்னுகத் துறுபாசப் பிணியறுப்ப
தரிதொன்றோ வெண்ணுங் காலே. (௧௦௧)

வேறு.

608 பேயின தவலத் துணைமுலை பிசைந்து
பிசைந்துயிர் குடித்துளா னருளாற்
றுயின தவலந் தீர்ந்திட மருந்து
தனைக்கொணர்ந் தளித்தலும் வானோர்க்
காயின தவல மெனக்குறித் ததனை
யவர்க்குமீட் டுதவலா லீனோர்
நோயின தவலந் தீர்த்திடு மருந்து
நவிலிலிங் கிவனெனு முலகம். (௧௦௨)

609 பூசலுற் றாவு களைத்தொடர்ந் திடவே
புறக்கொடை புரிந்துபொன் னகர்வாழ்
வாசவற் கிளைய முதல்வன்வீற் றிருக்கும்
வளக்கொளா சனத்தினை வளைப்ப
நேசமுற் றெனதா முனைவினைப் புரக்கு
நினைவெவ னென்னவீ ரிடத்தும்
பாசமுற் றனதா மடைக்கல மெனவே
பாமனன் றருள்புரிந் தளிப்ப. (௧௦௩)

610 அநந்தனை யிடது காத்தினிற் கார்க்கோ
டகனொடு வாசுகி யுரத்தி
னனந்தலைச் சிரத்திற் சங்கனைப் பதும
நாபன்மா பதுமநா பனெனு
மினந்துணைச் செவியிற் குளிகனைப் புயத்தி
னெழில்பெறு தக்கனைத் தனதா
மனங்களி கடிசூத் திரமெனப் புனைந்த
வள்ளலென் னுயிர்க்குநன் மருந்தே. (௧௦௪)

இரண்டுந் தொடர்.

611 பூரண முனிவர் புனல்படி புனிதப்
பூமலி பொய்கைவா யாமை
வாரணத் துடனே பொருவகண் டெடுத்து
வடத்துற வதன்சினை முரிந்த
காரணத் ததனை நாசியாற் கோலிக்
கவின்பயில் வாலகில் லியர்க்கு
நாரணன் பதவி யளித்தபுள் ளரசே
நயந்தவென் னுயிர்க்குநன் மருந்தே. (௧௦௫)

612 உள்ளலாம் பறவை பயிலிடு சினையை
யுததிகொண் [1]டொளிக்கவே யுரவோ
யெள்ளலா தெமது சினைகளைத் தருதி
யென்றிட வளக்கரைச் சிறையா
லள்ளலாம் படிக்கன் றிறைப்பவே வருண
னடைக்கல மடைந்தவை யளிக்க
வள்ளலா யவற்றை யவைக்கருள் பறவை
மன்னனென் னுயிர்க்குநன் மருந்தே. (௧௦௬)

613 இடும்பைகூர் வேடர் திரளினைக் குறுகி
யிருசிற கரிஞ்வலைத் தடற்றுங்
கடும்பசிக் கருந்த வந்தணன் மிடற்றிற்
கனற்றலும் புறத்தருகு காலைக் .

[பி-ம்.] [1]டொளிக்கவு முரவோ. சா.

குடும்பமோ [1]டெமது மக்களைத் தருதி
கொற்றவா வென்றலும் வயிற்று
ளொடுங்குழி யாய்ந்து கொள்கெனக் கொடுத்த
வுவணனென் னுயிர்க்ுநன் மருந்தே. (கoஎ)

614 அந்தரத் துலவு மழைகிழித் தெழுந்தே
யமிர்தவெண் மதியக டுரிஞ்சு
மந்தரப் பொருப்பை மதியமு மூரிஞ்ச
வானவ ரமிர்துண வயிரச்
சுந்தரக் காத்தாற் கிளைத்துமத் துடனே
தூணமாம் படிபயோ ததியுட்
டந்தபுட் காசன் றனையலா தெவர்நற்
றுனவா னவர்தனி மருந்தே. (கoஅ)

615 முன்னையா ருயிர்கட் குயிர்களா முதல்வன்
முயன்றுபொன் னகர்புகத் தொடர்ந்த
தன்னையா தரித்துத் தருமலர் புராவாத்
தானமங் கையர்தவ றினையெ
னன்னையா னவளத் தனுக்குரைத் தருநீஇ
யைந்தரு வையும்புவி யினினைப்
பின்னையா னவட்கே யுதவினு னன்றிப்
பின்னையா ரெனக்குத வுவதே. (கoகூ)

நான்காவது
[2]கோயில்வருணனைச்சருக்கம் முற்றும்.

---

[பி-ம்.] [1]டெமக்கு, கா.

ஸ்ரீ :

## ரு. கெந்தமாதனவருணனைச் சருக்கம்.

616 ஆனாத பிரகிருதி தனிற்செனித்த
மகான்முதலா மனைத்துந் தோற்றந்
தானுமுன் பமைத்துளவித் திருநகருட்
சுடர்மயமாந் தன்மை மேய
வானாடர் வழுத்திபசீர் மலர்மகள்கோ
னிறைபிரியா வாய்மை மண்மே
னானுமின் றுரைப்பனெனத் துணிந்ததுமே
தினியிதற்கென் [1]னவிலு மாதோ. (க)

617 வானவருங் குழைந்துருகத் தும்புருவு
நாரதனும் வடித்த தேவர்
கானமதை மனுகுலத்தோ ரரிகுாலன்
வடித்துணர்த்தல் கடன தாமே
யூனமிலா நான்முகனும் வேதவியா
தனுமுணர்த்து முண்மை யாதித்
தான[2]மிதன் பெருமையையா னுரைப்பலெனத்
துணிந்ததற்கென் சாற்று மாறே. (உ)

618 கவிக்குலங்கட் கரசனளக் கரைத்தாய
கதிபிறமர்க் கடங்கட் கெல்லாம்
பவிப்பதெளி தெனலாமே வேதமறு
வகைத்தாய பான்மை காட்டிப்
புவிப்புலவர் புகழ்பதினெண் புராண முரைத்
தவனுமைபோற் புனித ரொண்மைச்
செவிப்புலனுட் கொளவிதனை யுரைப்பனெனத்
துணிந்ததற்கென் செப்பு வேனே. (ங)

---

[பி-ம்,] [1]னவிலு மாறே. க. [2]மிதின், க.

619 நாமமா தியபிறவு மெண்ணிலவா
யிரமெனவாழ் நாத னுமர்
தாமநா ரணனகரின் சரிதைவியா
தன்னுரைக்கத் தக்க நீர்மைத்
தாமதார் கலியுலகந் தெளிந்ததஃ
தென்புலமைக் கடங்கில் விண்மேற்
காமதே னுவின்கவிகை யிவ்வுலகத்
தொருகபில கற்ப தாமே. (௪)

620 தூதுண்ணும் புறவினுக்குப் பருப்பதத்தை
விழுங்குவதுஞ் சுரும்பு வாசத்
தாதுண்ணு மலர்க்குழற்றாய் முலைப்பாலுண்
மழவினுக்குச் சாதி வானப்
போதுண்ணும் படிக்கமிர்தந் தருகடலைப்
பருகுவதும் பொருந்தி னன்சொற்
கோதுண்ணும் படிபுணர்புன் கவியேற்கு
மிதன்பெருமை கூற லாமே. (௫)

621 மாசுணத்துக் குணவுமருத் தென்றலும்
விநதையெனு மடந்தை யீன்ற
தேசிகனு சியினுயிர்ப்பா மருத்தருந்தக்
கூடும்வேற் றிரைநீர் வேலைத்
தூசுடைநா னிலம்பழிபுன் கவிபுணர்க்குஞ்
சிறியேற்குந் தொலைவில் கீர்த்திக்
கேசவன்மாக் கதைகளைக்கற் றவர்வியப்பான்
மதுராமுறக் கிளத்த லாமே. (௬)

622 *மாதண்டர் புகழ்ந்திடவாழ்ந் தருள்வாம
பாகத்து மழைதோய் வெள்ளி
வேதண்ட மிசைப்பவள வேதண்டம்
பகிரண்டம் விழைவு கூர்வான்
மூதண்ட முகடுதொடு மும்மதிளின்
முரண்முருக்க முன்கைக் கொண்ட
கோதண்ட வடவரைபோற் பணைத்தகெந்த
மாதனமாங் குன்றென் றுண்டே. (௭)

623 பணங்களா யிரஞ்செறி[1]வன் பணிபரித்த
வெறிதிரைநீர்ப் பாப்பிற் பல்பூக்
கணங்களாற் கற்பகப்பூம் பொதும்பர்குடி
புகுந்தமலர்க் கணங்க ளான்மென்
சுணங்குலாந் துணைமுலைப்பூ மகணறுமென்
சுரிகுழல்போற் சுகந்த மேய
மணங்களான் மதம்புரந்து கெந்தமா
தனமெனப்பேர் மதிப்ப தாமே. (அ)

624 பசும்பொன்மால் வரையெனலாம் படிக்குவயின்
வயின்விளையும் பசும்பொன் னீட்டத்
தசும்புதா நறவொடுதா தளவளாய்
மணங்கமழற் புதத்தி னானும்
தசும்புளா ரமிர்தருந்தி யமரரெனப்
புனைபெயராற் றலைமை சான்ற
விசும்புளார் களுமறித்துங் கெந்தமா
தனமெனப்பேர் விதிப்ப தாமே. (கூ)

625 *அறிவுடையார் [2]தத்துவமாண் பொருளுரையாய்ந்
தறிகழகத் தறிவொன் றில்லா
வறிதுடையா ரடைதரிற்சிற் குணத்தினாய்த்
தலைப்படுமெவ் [3]வாழ்வே போல
வெறிவரிவண் டுளர்நறுமென் சந்தனப்பூம்
பொதும்பரிடை விராய வேலை
முறிபடுதன் சினைவெளிற்றுத் தாருவுமாங்
கதிர்கமழு முதன்மைத் தாமே. (க0)

626 அருநரகுங் கூற்றுவனுங் கடவுளருமுண்
மையையுணர்ந்தே யறனல் லாத
தொருபொருட்கு மிழைத்தறியாத் தமையுமவ
மதித்தநரு மலகம் யாவும்

[மூ-ம்.] [1]வண் பணி. சா. [2]தத்துவநுண். மா. [3]வாழ்வு. மா.

வெருவரவன் படிறிழைத்தோர்க் குறும்படிறுற்
றினைந்துபய விழிநீர் பெய்யும்
பொருவருமுத் தமப்புனிதர் பொறையினைப்போன்
றுயர்ந்துளதப் பொருப்பு மன்னோ. (கக)

627 அந்தாமம் புரந்துமலர் மகளைமணந்
தாவிலமர்ந் தாழி யேந்து
மெந்தாயைப் பாப்பிரம மெனுமறைபோன்
றகன் றுளதா மென் றுந் தன்பால்
வந்தார்கட் கருமறையா மவற்றினொடு
மவற்றின்வழி வந்த நூல்கற்
றுய்ந்தார்கட் கவைதருபே ரின்பமெனப்
பேரின்ப முப்ப தாமே. (கஉ)

628 இடக்கின்றுங் கலையொருமுன் றினையுமுணர்த்
து தற்கொருவ ரிழையா வேதர்
தொடக்கின்ற முதலரியென் றுரைப்பவவன்
பிரமமெனத் து ணிந்தோர் தம்பா
லடக்கின்றுங் கலையுணர்ந்தோ ரவைசமைத்த
தனைத்திடனென் றுடல் கண்டு
நடுக்கின்று நிலையுணர்வி னடுக்கின்றுஞ்
சயிலமெனு ஞால மாதோ. (கங)

629 வளைத்தகன்றுழ்ந் துயாளக்கர் வறந்துவளங்
குறைந்திடி னு மதிதோய் விண்ணிற்
கிளைத்தனவாம் புயல்பெயன்மா றினும்வளங்குன்
று துபசி கிளர்ந்தே மேனி
யிளைத்தவர்தா மடைதரினின் னமிர்தளித்து
நிழற்றுதலா லீறி லின்பம்
விளைத்தவரா முனிவருமா யிடைப்பிரியா
விருப்பளிக்கும் வெற்ப தாமே. (கச)

630 கற்பனவாங் கலைகளறு பத்தொருநா
ளையுமுறையிற் கற்ற நூல்கற்
றுற்றனரா மதிமதராப் புலமையின
ரிடத்தவற்றை யுறவு கூறப்
பெற்றவர்தாங் கொளத்துணிந்து மவர்கொடுத்து
மவைகுறையாப் பெற்றி போன்றவ்
வெற்பனவாம் வளங்களுங்கொள் பவர்கொளவுங்
குறையாத மேன்மைத் தாமே. (கரு)

631 ஒருபாகத் தினிலருவி குடமுழவிற்
கொடுமுடிநின் றூறி வீழ
வொருபாகத் தந்தணர்தாஞ் சுருதியுடன்
மிருதிபயி லொலிக ளோங்க
வொருபாகத் தளியிவர்பூந் தாதுதிரைத்
தெழுப்புமிசை யுவகை யூட்ட
வொருபாகத் தடுகளிற்றின் [1]மதச்சுவடற்
றரியிடியொத் துலம்பு மாதோ. (கசு)

632 எழுதொணு மறையுணருந் தோறுமுணருந்
தொறுமுணர்விற் கெட்டா தானைத்
தொழுதுவாழ் பவரவன்பொற் றுணையடிக்கீழ்ச்
சொரிந்திடலுஞ் சுரும்பூந் தேனுந்
தொழுதுநாண் மலரவிழ்தென் னறவினெடுங்
கல்யாண குணங்கள் பாடி
யழுதுவார்ந் திழிதருகண் ணீரினெடு
மிழிதருநீ ரருவி நாளும். (கஎ)

633 சொரிவைமான் டிரளருவிப் புனல்பார்த்து
தழனியொடுர் தளங்கு சாரன்
மானைமான் கலைகளோன் புலிக்குருளை
யினையுருட்டி வருத நெஞ்சி

---

[ஸ்ரீ-ம்.] [1]மதஞ்சுவடெற். சு.

யானைமாண் புனிற்றிளங்கன் றினைப்பிடர்க்கொண்
டதனயலே யெழுத னேமித்
தானைமாண் கடலமுவத் திருவரைமேற்
சுடர்பொருவுந் தன்மைத் தாமே. (கஅ)

634 பொருப்பதனிற் றவழ்புயல்கள் பொழிமணியைப்
பொழிபுனலாற் புணரி போன்றப்
பருப்பதத்தி னொருபுடைநித் திலநதியா
மெனக்கொழிக்கும் பான்மைத் தோர்பா
னெருப்புமிழுங் குழிச்சிறுகட் டறுகண்வயக்
களிற்றினம்வெண் ணிலவிற் றேன்று
மருப்புகுமுத் தினைக்காட மதக்கலுழி
சுழித்தருவி வழிவ தோர்பால். (கக)

635 ஆசியாம் புனிதவுரைப் புத்தேளி
ரம்பையர்தா மகன்ற விண்மேல்
வீசியாங் கெழுகழையுண் மிடைந்தமது
கங்களுகும் வெளிய போதை
நாசியா பரணமெனப் புனைவதற்காந்
தாளமென நளினக் கண்ண
னேசியா விரைந்தெடுத்தன் மையினணி
மென்மையுறீஇ [1]நிற்ப ரோர்பால். (உ0)

636 சந்தனத்தேம் பொதும்பரிற்பூந் தாதுதிரைத்
தருந்துமளி தாந்தா மென்றே
யந்தாத்தோர் மதிமருள மிழற்றுமிசை
யிருசெவியா லார வுண்ட
சுந்தரக்காட் டாவினது குவிமுலைக்கண்
டிறந்திழிபாற் சோனை யோடு
மந்தரமோத் தெழுகளிற்றின் மதம்பெருகி
யாறலைத்து வழியு மோர்பால். (உக)

---

[பி-ம்.] [1]நிற்ப தோர்பால், க.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| | ... | 0 | 3 | 0 |
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கணுநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 12 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) ... | | | |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 2 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | 0 | 4 | 0 |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 2 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 12 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 4 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 3 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 2 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 8 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | | | |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | 0 | 1 | 0 |
| 24. | குருமொழிவிணுவிடை ... ... | 0 | 2 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... ... | 0 | 1 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 8 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | | | |
| 28.* | சந்திராலோகம் ... ... | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திரநூறுபாட்டுக்குரை ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச் சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப் பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன்தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.